# புதுமை கண்ட பேரறிஞர்

(பிரயாண நூல்)

ஆக்கியோன்

வித்துவான் பாலூர் P. D. கண்ணப்ப முதலியார்.

புத்தக நிலையம்

ராயவரம்

(புதுக்கோட்டை ஸ்டேட்)

# முன்னுரை

செந்தமிழ் நாட்டுத் தேசியக் கவிஞர் பாரதியார் அவர்கள், மறைவாக, 'நமக்குள்ளே பழங் கதைகள் கூறுவதிலோர் பயனுமில்லை' என்று கூறியிருப்பதை ஒருசிலர் அறிவர். அவ்வுரையை நன்கு சிந்தித்தே புதுமை கண்ட பேரறிஞர் என்னும் இந்நூல் வெளிவர ஏதுவாயிற்று. இந்நூலில் புதுமை காணும் பேரவாவினால் மேற்கு நாட்டவர்கள் எவ்வளவு முயன்று பாடுபட்டனர் என்பதும், இதன் பொருட்டு சிலர் உயிரையும் தியாகம் செய்தனர் என்பதும், அதனால் இப்பொழுது அப்புத்திடங்கள் போக்குவரவுக்குச் சாதகமாக இருந்து வாணிபம், சமயம் முதலியவற்றை வளர்ப்பதற்கும் துணையாயிருக்கின்றன என்பதும் ஆகிய பல செய்திகள் கூறப்பட்டிருத்தலின் இதனைப் பயிலும் மாணவர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் பிறக்கும் என்னும் நோக்கங் கொண்டே இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இதனைத் தமிழ் உலகம் ஏற்று என்னை இத்துறையில் மென் மேலும் ஊக்கும் என்று எதிர் நோக்குகிறேன்.

அம்மை அப்பர் அகம்
77, அவதானம் பாப்பையர் வீதி
ரூலா, சென்னை
31-12-48

இங்ஙனம்
பா. து. க.

## பொருளடக்கம்

# புதுமை கண்ட பேரறிஞர்

## 1. பெருவைக் காணும் பெருமுயற்சி

இப் பேருலகில் கணக்கற்ற பல அண்டங்களும் தீவுகளும் உள்ளன. இவை யாவற்றையும் பார்த்தவர்கள் எவருமிலர். மக்களின் உணர்ச்சி எப்புதுமையையும் காண அவாவி நிற்பது வெள்ளிடைமலையாகும். இவ்வுணர்ச்சியால் பற்பல புதிய இடங்களைக் காணத் துணிந்து சென்ற சில வீரரது வரலாறுகளைச் சிறிது கவனிப்போம்.

எல்டாராடோ செல்வ வளம்

ஐரோப்பாக் கண்டத்திற்கு மேற்கில் மூவாயிரம் மைல்களுக்கு அப்பால் இருப்பதாகக் கூறப்படும் செல்வம் கொழிக்கும் ஒரு புதுமையான நாட்டைப்பற்றிப் பலர் கேள்விப்பட்டிருந்தனர். அந்நாட்டின் செல்வச்சிறப்பு, மக்களின் மனத்தைத் திடுக்கிடச் செய்தது. ஆங்குள்ள ஆற்றங்கரைகளில் மாணிக்கங்களும் ரத்தினங்களும் மலிந்து கிடந்தன என்று கூறிக் கொண்டனர். அங்குப் பைம்பொன் வெற்புகளும் விளங்கினவாம். நகரங்களின் தெருக்கள் யாவும் பொன்னாலும் வெள்ளியாலும் அமைக்கப் பட்டிருந்தனவாம். இவ்வாறாகிய சிந்தனைச் சிற்பமாகிய எல்டாரோடோவின் செல்வச் சிறப்புக்கள் உண்மையிலேயே அங்கு நிறைந்திருந்தன என்பது கூறப்பட்டது.

நம் இந்திய நாட்டின் ஆறுகள் பொன்னைக் கொழிக்கும் என்றும், வரைகளின் சிறப்புக்களையும் நகர்வனப்புக்களையும் உயர்வு நவிற்சியாகப் பொன்மயமானவை என்றும், கவிகள் புனைந்து குறிப்பிடுவது மரபு. என்றாலும் மாணிக்கம் நிறைந்த ஆறுகளையும், பைம்பொன் மலைகளையும், பொன்பூசிய தெருக்களையும் எவரும் என்றும் கண்டிலர். ஆனால் இப்புதிய நாட்டில் இவை யாவும் இயற்கையாகவே இயைந்திருந்தன என்பது அறிவுறுத்தப்பட்டது. இதனால் நம் நாட்டின் வளங்களைக் கூறவந்த தண்டமிழ்ப் புலவர்கள் புனைந்து கூறிய யாவற்றையும் உயர்வு நவிற்சியாகக் கொள்ளாது இயற்கை நவிற்சியாகக் கொள்ளுதலில் இழுக்கு ஒன்றும் இல்லையென்பது இதனால் தெரியவருகிறதன்றோ?

'ஆணிப்பொன் தகடுறிஞ்சும் மணிக் கதவம் நீள் வாயில்' என்பதும் 'பொன்னி பொன் கொழிக்கும்' என்பதும் தமிழ் நாட்டுச் செல்வ வளனை நன்கு அறிவுறுத்தும் சான்றுகளாகும்.

இவ்வாறாய சீரும் சிறப்பும், பேரும் புகழும் இங்கிலாந்து, போர்ச்சுகல், ஸ்பெயின் முதலிய நாட்டு மக்களின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. மேற்கூறிய அச்செல்வ வளங்கள் சிந்தனைக்கும் எட்டாக் கற்பனையோ என்று எண்ணுதற்குரியன வாயிருப்பினும், அதில் சிறிதளவேனும் உண்மையிருக்கும் என்று கூறுவதில் யாதோர் இழுக்கும் இராது. ஆகவே புதுமை காண விழையும் வீரனார் பலர் இவ்வரும்பெரும் செல்வங்களைப் பெற முயன்றதில் வியப்பொன்றுமில்லை.

சற்றேறக்குறைய நானூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் *ஸ்பெயின் தேசத்தில் †சான் டாமிங்கோ

* Spain † San Domingo

என்ற நகரில் *பால்போ என்ற ஒரு வறிஞர் வாழ்ந்து வந்தார். அவர் ஊக்கம் மிகுந்தவர். அவர் தனது வாழ்க்கையைத் தோட்ட வேலையில் தொடங்கினர். மண்ணின் வள பால்போ வீரர் மறிந்து, இன்ன இடத்தில் இன்ன செடி இம்முறையில் வளர்ந்து இவ் வளவு பயன்தரும் என்பதை நன்குணர்ந்து, அத் தொழிலைத் திறம்பட நடத்திவந்தார். நாளடைவில் இத் தொழிலில் இவர் கொண்ட ஊக்கமும் உற்சாக மும் குன்றியது. ஆனதால் இவர் வேறு துறைகளில் தமது நாட்டத்தைச் செலுத்த எண்ணினர்.

தோட்டக்காரராகிய பால்போவுக்கும் புதிய நாட்டின் செல்வச் சிறப்புக்களின் செய்தி எட்டியது. வேற்றுத் துறையில் பொருள் காண விழைந்த இவ ருக்கு இச் செய்தி 'எட்டிய பொருள் கிட்டியது' போலப் பட்டது. தான் செய்து வந்த தோட்ட வேலையை விட்டுப் பொருளீட்டும் வேட்டையில் நாட்டங் கொள்ளத் தலைப்பட்டார்.

பொருள் குவிந்த நாட்டையடைய வேண்டும் என்று நாட்டங்கொண்டும் யாது பயன்? அவ் விடத்தை யடையக் கால் நடையாகச் செல்ல இய லாது; கப்பலின் உதவியே காணவேண்டும். பால் போவுக்கு ஊக்கம்,உற்சாகம்,தீரம் முதலியன இருந் தும் பிரயாணம் புறப்படப் போதிய பொருள் வசதி இல்லை. இருப்பினும் 'தாம் வெளிநாடு செல்ல வேண்டும்' என்று கொண்ட எண்ணத்திற் சிறிதும் குறைந்தாரில்லை. தம்மிடமும் பொருளில்லை; பிறர் உதவிநாட விரும்பவுமில்லை. தந்திரச் செயல் புரிந்தே தம் கருத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்று தக்கதொரு சூழ்ச்சியை ஆராயலானர்.

---

*Balboa

1501-ம் ஆண்டு, பால்போ ஒரு நாள் இரவு கடற்கரை சென்றார். அங்கிருந்து மறுதினம் புறப்பட ஆயத்தமா யிருக்கும் கப்பல் ஒன்றில் ஏறிச் செல்ல அவாக் கொண்டார். எவரு மறியாதபடி ஏற்றுமதி செய்யப்பட வேண்டிய பீப்பாய் ஒன்றினுள் புகுந்து கொண்டார். எதிர்நோக்கியபடியே அந்தப் பீப்பாயும் கலத்தின் ஏற்றப்பட்டது. கலமும் கடலில் செல்லத் தொடங்கிற்று. 'ஆசை வெட்கம் அறியாது' என்று கூறுவது போல அவர் கொண்ட நோக்கம் நல்லதாக இருப்பினும், அவர் செய்யத் துணிந்த இச் செயல் எவ்வளவு வெட்ககரமானது என்பதையும் அவர் கருதினாரில்லை! அக்கப்பல் *டாரியன் வளைகுடாவில் ஒரு துறைமுகம் வந்து அடையும் வரையில் பால்போ பீப்பாயினின்றும் வெளிப்படவே யில்லை. துறைமுகத்தில் அது வந்தடைந்த பிறகுதான், அவர் தாம் கரந்துறைந்த கலத்தினின்றும் மெல்ல வெளி வந்துற்றார். எவ்வளவு அச்சத்துடனும், அபாயத்துடனும் அவர் இவ்விதம் வந்திருப்பார்? என்னே இவருக்கு வெளி நாட்டுப் பயணத்திலிருந்த பற்று!

பால்போவின் பயணம்

இதன் பின் சில ஆண்டுகளுக்குப் பிறகு பால்போவைப் போன்றே நாடு காணும் ஊக்கமும் உணர்ச்சியும் மிக்க மற்றும் பலர் இவருடன் சேர்ந்து கொண்டனர். இக்குழுவினர்க்கு இவரே தலைவராய் விளங்கினர். குழுவினரில் †பிஸாரோ என்ற ஒரு பெரு வீரர் முக்கியமானவர் ஆவார்.

பிஸாரோ பெருவீரர் ஸ்பெயின் தேசத்தில் உதித்தவர். கல்வி நிரம்பியவர் அல்லர்; ஒரு

* Darien Gulf † Francisco Pizarro

முரட்டு மனிதர். இவர் ஊக்கமும், விடா முயற்சியும், துணிவும், வீரமும் நிரம்பியவர்.

**பிஸாரோ பெரு வீரர்**

இளமைப் பருவத்தை மிகவும் இன்னல்களுடன் கழித்தவர். பன்றிக் கூட்டங்களை மேய்த்து அதிற் கிடைக்கும் வருவாயைக் கொண்டு வயிறு வளர்த்து வந்தார். பல்லாண்டுகளாகச் செய்து வரும் இத்தொழில் இவருக்குக் கடும் வெறுப்பை யளித்தது. இந் நிலையிலுள்ள இவருக்கும் புதிய நாட்டின் செல்வ வளச் செய்தி எட்டியது. ஆற்றங் கரைகளிலுள்ள மாணிக்கங்களையும், மலைகளிலுள்ள பொன்னையும் வாரி எடுத்து வந்து வறுமை நீங்கலாமென நினைத்தல் இயல்பேயன்றோ! இடையே எவ்வளவு இடுக்கண்கள் இருப்பினும் அச்செல்வ வளநாட்டைச் சென்றடைந்தே தீர்வது என்று துணிவு கொண்டார். தத்தளிக்கும் இளங் கொடிக்கு கொழு கொம்பு கிடைத்தது போன்று இவர் பால்போ வீரரை எதிர்ப்பட்டார். அவரது குழுவில் பிஸாரோவும் கலந்து கொண்டார்.

உடல் உரமும் உள்ளக் கிளர்ச்சியும் ஒருங்கே அமையப் பெற்ற தளபதியாகிய பால்போவும் அவருடைய துணைவராகிய பிஸாரோவும், மற்றும் சில வீரர்களும் 1513-ம் ஆண்டு வட அமெரிக்காவையும் தென் அமெரிக்காவையும் இணைக்கும் குறுகிய நிலப் பரப்பை நோக்கிச் சென்றனர். ஊக்கம் மிக்க இவ்வீரர்களின் உடலம் கடலிற் செல்லும் கலத்தில் இருந்த போதிலும், தாம் செல்லும் நாட்டிற்குத் தென்பாலிருக்கும் பொன்னும் மணியும் நிறைந்த நாட்டின்பாலேயே அவர்களது உள்ளம் சென்றடைந்திருந்தது. இவ்வாறு இவர்கள் பேரூக்கத்துடன் முன்னேறிச் சென்றும் அவர்களால் அந்தக் கடலில் அதிகத் தூரம் செல்ல முடியவில்லை.

மலைத் தொடர்களாலும், கடலில் மூழ்கியுள்ள சிறு குன்றுகளாலும், குறைந்த ஆழமுள்ள நீர் நிலைகளாலும் அவர்களது பிரயாணம் சிறிது தடையுற்றது. என்றாலும் இவர்கள் அதனால் மனம் சோர்வடைந்து பின்னடையாது தம் போக்கையே மேற்கொண்டனர். இறுதியாக இவர்களது எண்ணம் ஈடேறியது; கடந்து செல்லவேண்டிய குறு நெறியையும் கடந்துவிட்டனர். பல இடுக்கண்களுக்குப் பிறகு ‡பனாமாவை அடைந்தனர். குறைவான வசதிகளும், போதிய பொருளும் இல்லாமையால் இவர்களது பயணம் தொடர்ந்து நடைபெறுவதற்கு இயலாது போயிற்று.

அரும்பெரும் உதவி

தாம் மேற்கொண்ட பயணத்தைத் தொடர்ந்து நடத்த இக்குழுவினர் ஆங்கு பனாமாவிலேயே சில ஆண்டுகள் தங்கவேண்டுவது அவசியமாயிற்று. பல ஆண்டுகள் கழிந்த பிறகே இவர்கள் திரும்பவும் தமது பயணத்தை மேற்கொள்ள வேண்டுவதாயிற்று. பனாமாவிலுள்ள ஸ்பானிய மடத்துத் தலைவர் பெரிதும் பணஉதவி செய்து இவர்களை ஊக்குவதாக வாக்களித்தார். மற்றும் ஸ்பெயின் தேசத்தைச் சேர்ந்த ஆங்குள்ள *அல்மாக்ரோ என்ற ஊக்கம் மிக்க ஒரு சிறந்த போர்வீரனும் தன்னாலியன்ற உதவியை யளிப்பதாக ஒப்புக்கொண்டான். புதுமை காண்பதிலும், பொருளீட்டுவதிலும் அல்மாக்ரோ கொண்டுள்ள ஊக்கமும் அவாவும் பிஸாரோவின் நாட்டங்கட்கு எவ்விதத்தும் குறைந்தவை அல்ல.

பனாமாவிலேயே புதுமை காண விழைந்த உள்ளக் கிளர்ச்சி மிக்க வீரர்கள் ஒரு நூற்றுவர்

---

‡Panama * Almagro

இவர்களுடன் துணைவர இணங்கினர். இத்தகைய பொருளுதவியும், துணை உதவியும் பெற்ற பிஸா ரோவும் பால்போவும் 1524-ம் ஆண்டின் பிற்பகுதி யில் புது உலகை நோக்கித் தமது பிரயாணத்தைத் தொடங்கினர். இவர்கள் ஏற்பாடு செய்துகொண்ட படி அல்மாக்ரோ வேறொரு சிறு கப்பலில் மேலும் சில பொருள்களுடனும், மிகுதியான உணவுப் பொருள்களுடனும் புறப்பட்டு விரைவில் பிஸா ரோவைச் சேர்ந்து கொள்வது என்றும் முடிவு செய்து கொண்டனர்.

பிஸாரோவும் குழுவினரும் பனமாவுக்குத் தென் கிழக்கிலுள்ள *முத்துத் தீவை யடைந்தனர். அங்கோரிடத்தில் கலத்தை நிறுத்திவிட்டுப் பிஸாரோ கரையிலிறங்கிக் கால் நடை யாகவே உள் நோக்கிச் சென்றார். அங்கு மக்களின் உறைவிடம் ஏதேனும் இருக்கின் றதோ என்று ஆராயலானார். உள் நாட்டையடைய ஒரு பெருங் காட்டைக் கடக்க வேண்டுவதாயிற்று. அதைக் கடந்து செல்வதாயின் கோடரிகொண்டு மரங்களையும் புதர்களையும் வெட் டியே வழி செய்துகொள்ள வேண்டும் எனத் தோன்றியது. 'காடு வெட்டிக் கடுநெறி காண்பதி னும் வந்த வழி திரும்புவதே சால்புடைத்து' என்று பிஸாரோ உளங் கொண்டார். மேலும் தாம் நாடி வந்த பொன்னேனும், மணியேனும், பொற்சாலை களையேனும் காணாது ஏமாற்றமடைந்தார். மக்களே தென்படாத அந்தத் தீவில் தாம் காணவேண்டியது ஒன்றும் இல்லை என்று தேர்ந்து, திரும்பக் கலம் வந்துற்றார். தென்றிசை நோக்கியே கலத்தைச் செலுத்தலானார்.

முத்துத் தீவு

* Isle of Pearls

இவரது கப்பல் ஆழியின் நடுவே போய்க் கொண்டிருக்கையில் ஒரு பெரும் புயல் அடித்தது. அதனால் இவர்களது மரக்கலம் உற்ற கலக்கத்திற்கு அளவேயில்லை. 'சூறுவளியில் அகப்பட்ட கப்பலே போன்று' என வழங்கும் தொடரின் உண்மையை இதனை நேரிற் கண்டவர் நன்கு உணர்ந்திருப்பர். 'பட்ட காலிலே படும்; கெட்ட குடியே கெடும்' என்பது முதுமொழியல்லவா? வலியால் வாட்டமுற்ற வன்மையராம் பிஸாரோ, தாம் கொணர்ந்திருந்த உணவுப் பொருள்கள் குறைந்துவிட்டதை உணர்ந்தார். உணவு சேகரித்து நிரப்பவேண்டியது மிகவும் இன்றியமையாததாகி விட்டது. உண்ண உணவும், பருக நீரும் நிரப்பிக் கொள்வான் வேண்டிக் கரையோரமாக ஓரிடத்தில் கலத்தை நிறுத்திக் கரையிலிறங்கினர்.

ஆங்கு நிறைந்திருந்த மரங்களின் பழங்களிற் சிலவற்றை ஆவலோடு புசித்தனர். அருகிலிருந்த குட்டையொன்றில் நீர் பருகச் சென்றனர். அந்தோ! இவர்களது நிலைமை மிகவும் பரிதாபமாகக் காணப்பட்டது. இவர்கள் அருந்திய பழங்கள் இவர்களின் தேக நிலைக்கு ஒத்துக் கொள்ளவில்லை. குளம், குட்டைகளில் நிறைந்திருந்த நீர், நச்சுத்தன்மை பொருந்தியதாக இருந்தன. புயலடித்ததால் குடி நீர் கெட்டிருந்தது. குழுவினர் பிணி நோய்வாய்ப்பட்டனர். இந்நிலைமை பிஸாரோவுக்கு இன்னது செய்வதென்றே புரியவில்லை. இதற்கேதேனும் வழி காணாது விழித்தார். உணவும் நீரும் இன்றி என் செய இயலும்!

இவ்வித இன்னல்களுக்காளான பிஸாரோ, தாமும் தம் குழுவினரும் உயிருடனிருக்க உணவுப்

பொருள்கள் கொணர்வது மிக அவசியம் எனக் கண்டார். உடனே பாதிப்பேரை கலத்துடன் முத்துத் தீவு சென்று அங்கிருந்து உணவுப் பொருள்களை நிரப்பி வர வேண்டுமென்று திட்டம் செய்து, அவர்களை யனுப்பினர். எஞ்சியவர்களுடன் தாம் மட்டும் இந்த இடத்திலேயே இருந்துவர உறுதிகொண்டார். கப்பல் திரும்பி இவ்விடம் வந்தடையும் இடைக்காலத்தில் இவர்களடைந்த அல்லல்களுக்கு அளவேயில்லை. தலைவராகிய பிஸாரோ நோய் கொண்டாரேனும் அதன் பொருட்டு உளம் தளர்ந்தாரில்லை. தலைவராகிய தாமே தளரின், ஏனையோர் மிகுதியும் தளர்ந்து ஊக்கங்குன்ற, மேற்கொண்ட எண்ணம் ஈடேறாமற் போய்விடுதற்கு ஏதுவாகுமே என்று அஞ்சினர். தமக்குரிய உணவையும் பிறர்க்கீந்து அவர்களுக்கு உற்சாகமூட்டிவந்தார். தம்மால் இயன்றவரையில் தம் குழுவினர்க்கு உதவி, அவர்களது ஊக்கம் தளராதபடி செய்துவந்தார். இதுவன்றோ 'தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளர்' என்னும் முதுமொழிக்குரிய எடுத்துக்காட்டு!

துன்பமும் இன்பமும் மாறிமாறி வருவது இயல்பு. நம் வாழ்நாளில் தேய்பிறை வளர்பிறை இரண்டும் கண்டுவருகிறோமல்லவா? துன்புற்றிருந்த இவர்கள் மகிழ்வுறுதற்கேற்ற நிகழ்ச்சி யொன்று நேர்ந்தது. பிஸாரோ ஒரு நாள் தம்முடன் சிலரை அழைத்துக்கொண்டு தாம் இறங்கியிருந்த இடத்தினின்றும் உள்காடு நோக்கிச் சென்றார். பல பெரு மரங்கள் நிறைந்திருந்த ஓர் அடைப்புக்கு அப்பால் ஒரு சிறு கிராமம் இலங்குவதைக் கண்ணுற்றனர். ஆங்கு வதிந்த நாட்டுமக்கள் இவர்களைக் காணலும் பயந்து ஓடத் தொடங்கினர். பிஸாரோ குழுவினர் முன்னேறிச் சென்று அம்மக்களின் உணவிடங்

ளாகிய சிற்றில்லங்களின் முன்பு சென்று பார்த்தனர். அவர்களடைந்த ஆச்சரியத்திற்கு அளவேயில்லை. தானியங்கள், நல்ல காய் கனிகள், தேங்காய் முதலிய பல உணவுப் பொருள்கள் அங்கு நிறைந்திருந்ததைக் கண்டு மகிழ்ச்சி கொண்டார்கள்.

பயந்த மக்கள்

இவர்கள் இவ்வாறு முன்னேறியதைக் கண்டு பயந்த மக்கள் பின்னும் ஓடிக்கொண்டேயிருந்தார்கள். அதன் பின் இவர்களது செய்கைகளை மறைவிடத்திருந்து கவனித்தார்கள். இதையறிந்த பிஸாரோ அருகேயிருந்த சிலருக்கு நட்புக்குறிகள் காண்பித்துச் சமிக்ஞை செய்தார்.

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்

என்பது மணி மொழிதானே! பிஸாரோ அன்பு கலந்த முகத்துடன் அவர்களை அழைத்ததனால் அந்நாட்டு மக்களுள் தைரியமிக்க ஒருவன் இவர்களை நோக்கி மெல்ல, அருகே வந்தடைந்தான். இந்த மனிதன் தன் கை கால்களில் கலப்பற்ற தூய பொன்னாலான அணிகலன்களைப் பெருவாரியாய்ப் பூட்டிக் கொண்டிருந்தான். சாதாரணமாய்க் காணப்பட்ட இம்மனிதன் பூண்டிருந்த ஆடக ஆபரணங்களைக் கண்ணுற்ற பிஸாரோவும் ஏனையோரும் பெரு வியப்படைந்தனர். அவற்றைக் கண்ணுறக் கண்டனர். செல்வம் செழிக்கும் பொன் குவிந்துள்ள நாடு சேய்மையிலில்லை; அண்மையிலேயே உள்ளது; தாம் கேள்வியுற்றவை வெறும் கனவுப் பொருள் அல்ல; என்பதை உணர்ந்து ஆனந்தக் கூத்தாடினர். பெருங்கவலை கொண்டு உற்சாகம் குன்றியிருந்த இக்குழுவினர் இப்போது

மகிழ்ச்சி மேலோங்கியவராகத் தம் இருப்பிடம் சேர்ந்தனர்.

முத்துத் தீவை நோக்கிச் சென்ற கலம் சுமார் ஒன்றரை மாதங் கழித்தே மீண்டும் வந்துற்றது. திரும்பி வந்து சேர்ந்த வீரர்கள் மிகவும் இரங்கத் தக்க நிலையில் தம் பழைய நண்பர்களைக் கண்டனர். பிஸாரோவுடன் தங்கியிருந்த குழுவினருள் சிலர் இறந்து ஒழிந்தனர். சிலர் நோய்வாய்ப்பட்டு வருந்தினர். இந் நிலையில்தான் அவர்கள் உணவுப் பொருள்களுடனும் மற்றும் பல சாதனங்களுடனும் வந்து சேர்ந்தார்கள்.

கலம் வந்துற்றது

சிறிதும் தாமதிக்காது பிஸாரோ யாவருடனும் கப்பலைத் தென்கரைநோக்கிச் செலுத்தினர். இவர் செல்லுமிடங்கள் தோறும் அந் நாட்டு மக்கள் உறைந்திருக்கக் கண்டனர். சற்று நாகரிகம் பொருந்திய மக்கள் வாழும் இடங்கள் தென்படலாயின. இவ்வித மான இடங்கள் ஒன்றில் கலத்தை விட்டுக் கரை சேர்ந்தனர். சிறிது உள்ளடங்கிய ஒரு நகரம் புலப்பட்டது. இவர்கள் இதுவரை கண்டுவந்த கிராமங்களைவிட இந் நகர் மிகப் பெரிதாகவும், நல்ல அமைப்புடனும் காணப்பட்டது. நகரினுட் சென்று காணவேண்டும் என்ற ஆவலுடன் பிஸாரோ, தன்னுடன் வரும் சில வீரர்களை அவ்வூர் மக்களுடன் உறவாட அனுப்பினார். இங்கும் அந்த மக்கள் இவர்களைக் கண்டதும் ஓட்டமெடுத்தனர்.

உள் நாட்டு மக்கள்

இந்நகர மாந்தர்கள் கோழைகள் அல்லர்; இவர்களும் சிறந்த போர் வீரர்களே. அந்நியரது

குழு இரு பிரிவாகப் பிரிந்திருப்பதை யறிந்த இவர்கள் அவற்றுள் ஒரு கூட்டத்தைச் சினத்துடன் எதிர்த்தனர். இவ்வித வரவேற்பைச் சிறிதும் பிஸாரோ எதிர்நோக்கவில்லை. இருந்தாலும் அவர் சிறிதும் மனங் கலங்கவில்லை. தமது ஒப்பற்ற வீரர்களுடன், அந்நாட்டவரின் கூட்டத்தை எதிர்த்துப் பொருது, அவர்களைப் புறமுதுகிடச் செய்தனர். இந்தச் சிறு சண்டையிலும் தம் வீரர் சிலரை இழக்க நேரிட்டது.

**எதிர்ப்பு**

அம் மக்கள் இது சமயம் தோல்வியுற்ற போதிலும் தைரிய மிழக்காது திரும்பவும் எதிர்ப்பதற்குத் தக்க சமயம் எதிர்பார்த்திருந்தனர். பிஸாரோ தான் இக்குழுவிற்குத் தலைவன் என்பத றிந்த அவர்கள், பிஸாரோ சற்று அயர்ந்திருந்த நேரத்தில் திடீரென்று எதிர்த்தனர். வில்லம்புகளையும் சொல்லம்புகளையும் பொழிந்தனர். நஞ்சூட்டிய வேல்களை வீசினர். பிஸாரோவையே நேரிடையாகவே தாக்கத் தொடங்கினர். பிஸாரோவின் வீரர்களோ எண்ணிக்கையில் குறைந்துள்ளனர். எதிரிகளின் கூட்டமோ பெரும் தொகையாக எல்லை யற்றிருந்தது. சிறந்த போர் வீரனாகிய பிஸாரோ இந்நிலையில் இவர்களை யெதிர்ப்பது தக்கது அன்று என்பதை உடனே உணர்ந்தனர். 'கொக்கொக்க கூம்பும் பருவத்து' என்னும் கொள்கைப்படி இவர் சிறிது பின்வாங்குவார் போன்று போக்குக் காட்டினார். இவ்வாறு இவர்கள் பின்னடைந்தாலும் எதிரிகள் அம்பு வீசுவதை நிறுத்தவில்லை. பிஸாரோவை நோக்கி அவர்கள் எறிந்த வேல்களும், கூரிய அம்புகளும், அவருக்கு அநேகக் காயங்களை உண்டாக்கின.

இத்தகைய ஆபத்தான நேரத்தில் இவரைப் பிரிந்து சென்ற பாதி வீரர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். மிக்க ஊக்கத்துடன் இவ்வீரர்கள் எல்லோரும் ஒரே முகமாக வீராவேசத்துடன் எதிர்க்கவும் எதிரிகள் ஓட்டம் பிடித்தார்கள். இந்த எதிர்ப்பில் பிஸாரோ வெற்றி கண்டபோதி லும் அவரது வீரருள் ஐவர் உயிர் இழக்க நேரிட் டது; மற்றும் பலர் படுகாய முற்றனர்.

பிஸாரோ குழுவினர் பிரயாணத்தை அவ் விடத்திலிருந்து தொடர்ந்து நடத்துவது அரிதாகத் தென்பட்டது. காலநிலையும் பழுதுற்றிருந்தது. இவ் வளவு இடையூறுகள் இருந்தும் தாம் காண விழை யும் பெருவின் செல்வத்தைக் கண்டே மீளவேண்டி னர் பிஸாரோ. என்னே இவரது ஊக்கத்தின் உறுதி! தாம் போகுமிடங்களிலுள்ள மக்களின் போர் நாட்டமும், எதிர்க்கும் திறமையும் நேரிற் கண்ட பிஸாரோ, ஏராளமான ஆயுதங்களுட னும் போர்க் கருவிகளுடனும், நிறைந்த பண வசதி யுடனும் சென்றாலன்றிப் பெருவைக் காணும் திருவை அடைய இயலாதென்பதைத் தெள்ளென உணர்ந்தார். † சான் ஜுவான் ஆற் றின் வரையில் அவர்கள் வந்து சேர்ந்தும் இத் தகைய வசதிகள் இல்லாதிருந்ததால் தொடர்ந்து செல்லாது திரும்பிவிடுவதே அறிவுடைமையாகும் என்ற முடிவிற்கு வந்துவிட்டனர். அவ்வாறே மீண் டும் பனமாவை நோக்கித் திரும்பினர். முன்னம் செய்துகொண்ட ஏற்பாட்டின்படி மற்றொரு கப்ப லுடன் புறப்பட்ட அல்மாக்ரோவும் சான் ஜுவான் வரையில் வந்தும், பிஸாரோவின் குழுவினரைச் சந்திக்க இயலாததால் அவரும் மனம் ஒடிந்து பனமாவிற்குத் திரும்பிவிட்டார்.

---

† River San Juan

## இரண்டாவது பெரு முயற்சி

பொன் திகழும் பெருவை யடைவதற்கான பணமும், பொருளும் துணையும் பெறுவதற்குத் திரும்பி வந்தடைந்த பிஸாரோ குழுவினர் ஓர் இரண்டாண்டுகள் பனாமாவில் தங்கி ஆழியில் செல்ல னர். தக்காரைக் கண்டு பெரும் ஆயத்தம் பொருள் ஈட்டினார்கள். ஊக்க மிக்க வாலிபர்கள் இவர்களை வலிய வந்தடைந்து துணை வருவதாக இணைந்து வந்தனர். ஆகவே இம்முறை பெருவைக் காண, பலத்த ஆயத்தங்கள் செய்யப்பட்டன. இதற்காக இரு கப்பல்கள் தெரிந்தெடுக்கப்பட்டன; பல ஆயுதங்களும் போர்க் கருவிகளும் தயாரிக்கப்பட்டன. கப்பலைச் செலுத்தச் சிறந்த மீகாமர்கள் நியமிக்கப்பட்டனர். ஆழியின் ஆழத்தினையும், வழியின் உளவையும் தக்கவாறு நுட்பமாயறிவதில் அனுபவம் மிக்க *பார்த்தலோமியூ ரூயி, மீகாமர் தலைவராக நியமிக்கப்பட்டார். இவர் ஒரு மீகாமர் மட்டும் அன்றி ஒரு சிறந்த போர்வீரர் தலைவருமாவார்.

இத்தகைய வசதிகளைத் தயாரித்துக் கொண்டு தம் அரும்பெரும் குழுவினருடன் திரும்பவும் இரண்டாவது முறையாக பெருவைக் காண ஆயத்தமானார். பிஸாரோ பெருவைக் காணாது திரும்புவதில்லை எனக் கங்கணம் பூண்டனர்.

> எண்ணியர் எண்ணியாங்கு எய்துவர் எண்ணியார்
> திண்ணியர் ஆகப் பெறின்

---

* Barthalomeu Ruiz

என்பது உண்மையுரை அன்றே! யாவரும் வெற்றித் திரு உறுக எனக் கூறி வழியனுப்ப பிஸாரோ இரண்டு கப்பல்களுடன் பனமா விட்டுப் புறப்பட்டார்.

தாங்கள் முன் சென்றடைந்த சான் ஜுவான் நதி வரையில் வேறு எங்கும் நிற்காமல் நேரே சென்றடைந்தார்கள். அவ்விடத்தை அடைந்ததும் அனைவரும் கூடி ஒரு கூட்டமிட்டார்கள். அல்மாக்ரோ மறுபடியும் பனமா சென்று மேலும் பொருளும் துணையும் பெற்று வரவேண்டும் என்றும் ரூயி தெற்கு நோக்கிச் சென்று வழி எவ்வாறுள்ளது என்று உளவறிந்து வந்து தெரிவிக்க வேண்டியது என்றும், இவர்கள் இருவரும் திரும்பி வரும்வரையில் பிஸாரோ அவ்விடத்தேயே தங்கியிருக்கவேண்டியது என்றும் முடிவு செய்துகொண்டனர். இவர்கள் இத்திட்டப்படி பிரிந்து செல்லுமுன் உள் நாட்டிலிருந்து ஒரு கிராமத்திற்குச் சென்று தம்மை எதிர்ப்பட்ட சில பேர்களைப் பிடித்து வந்தனர். இவர்களும் மதித்தற்கரிய பொன்னாபரணங்களை அணிந்திருந்தனர். அவற்றையும் தம் வசமாக்கிக் கொண்டனர். இவற்றில் சிலவற்றை அல்மாக்ரோ எடுத்துசென்றான். இவற்றைக் காண்பித்து ஆவலை யூட்டித் துணைவீரர்களைச் சேகரிக்கலாம் என்பதே அவனது துணிவு.

தென்றிசை நோக்கிப் புறப்பட்ட ரூயி எவ்வித இடையூறுமின்றி அமெரிக்காவின் மேற்குப் பாகத்திலுள்ள கடலில் சென்றுகொண்டே யிருந்தான். முக்கிய நிகழ்ச்சி ஏதுமின்றி தெற்கு நோக்கியே கலத்தைச் செலுத்தினான். இவ்வாறு செல்லுங்கால் ஒருநாள் ரூயி, அருகிலே கப்பல் ஒன்று தன்னைநாடி விரைந்து வந்துகொண்டிருப்பதைக் கண்ணுற்று

மிகவும் ஆச்சரியப்பட்டான். இத்தகைய கலத்தைச் செலுத்துபவர்கள் யாரேனும் ஐரோப்பியராகத் தான் இருக்கவேண்டும் என்றே எண்ணினான். அந்தக் கப்பலும் இவனை அண்மியது. அருகுற்ற கலத்தைக் கண்டதும் அந் நாட்டு மக்களே அதில் நிரம்பியிருக்கவும், அவர்களே அதைச் செலுத்துவதும் கண்டு மிக ஆச்சரியமுற்றான். இம் மக்களும் இவ்வாறு உயர்ந்தமுறையிலும் செலுத்துகின்றனரே என பெருவியப்புக் கொண்டார்.

டும்பெஸ் மக்கள்

ரூயி அக்கப்பலில் உள்ளவர்களைத் தன் கலத்திற்கு வந்து பார்க்குமாறு அன்புடன் அழைத்தான். அவர்கள் சிறந்த விலையுயர்ந்த ஆடையணிகளை அணிந்திருந்தனர். ஆடை அணிகளால் அலங்காரம் செய்துகொண்டிருந்த அவர்கள் மேனி பொன்னெனப் பொலிவுபெற்றதைக் கண்ட ஸ்பானியர் பெரிதும் வியந்து இறும்பூதெய்தினர். அவர்கள் அணிந்திருந்த உடைகளும் விலையேறப் பெற்றவையாகும். அல்பாக்கா, லாமா ஆகிய பிராணிகளின் அழகிய உரோமங்களினால் தயாரிக்கப்பெற்ற விலையுயர்ந்த உடைகளை அணிந்திருந்தனர். அவர்கள் மிக்க நாகரிகம் நிறைந்தவர்களாகவும், மரியாதை பொருந்தியவர்களாகவும் தோற்றமளித்தனர். அவர்கள் ‡ டும்பெஸ் என்னும் நகரைச் சேர்ந்தவர்கள் என்றும், அங்கிருந்தே அவர்கள் வருவதாகவும், அந்நகர் சற்றுத் தென் திசைக்கு அப்பால் உள்ளதென்றும் கூறினார்கள். இருவருக்குமிடையே பேசுவதை உணர்த்த மொழிபெயர்ப்போன் ஒருவனும் முற்பட்டான். இவனது உதவியால் ஒருவர் பேசுவதை மற்றவர் உணர்ந்தனர்.

‡ Tumbez

ருயி பல தினங்கள் கழிந்தும் பிஸாரோவை வந்தடைந்தானில்லை. இவ் விடைவேளையில் பிஸாரோ தாம் இறங்கியிருந்த நிலப்பகுதியின் உட்சென்று ஆராயத் தொடங்கினர். உள்நாடு அடர்ந்த அடவிகளும், வானளாவிய வரைகளும் குறுக்கிட்டு உள்நாட்டில் முன்னேறிச் செல்லுவதைத் தடைப்படுத்தின. தவிரவும், இங்குவாழ் குடிமக்களாலும் துன்பம் நேரிட்டது. ஒரு நாள் இக்குழுவினருள் பதினொன்மர் ஒரு சிறு படகில் ஓர் ஆற்றைக் கடந்து கொண்டிருந்தார்கள். அப் படகு ஒரு சிறு வளைவில் திரும்பிக் கொண்டிருக்கும்போது படை தாங்கிய ஒரு சிறு கூட்டத்தினர் இவர்களை வளைத்துக்கொண்டனர். அதன்பின் இருதிறத்தாருக்கும் சண்டை நிகழ்ந்திருக்க வேண்டும்; அதில் அவர்கள் இறந்திருக்க வேண்டும்; அல்லது படகு கவிழ்ந்து இவர்கள் ஆற்றோடு சென்றிருக்க வேண்டும். யாது நிகழ்ந்ததென்பது எவருக்கும் தெரியாது. இவர்கள் தம் குழுவினரைத் திரும்பச் சேரவே இல்லை.

இத்தகைய இன்னல்களையும் இந்தத் துணிகரப் பிரயாணிகள் சிறிதும் பொருட்படுத்தவே இல்லை.

> இடுக்கண் வருங்கால் நகுக அதனை
> அடுத்தூர்வ தஃதொப்ப தில்

என்னும் உறுதி மொழிப்படி மகிழ்ச்சியையே மேற்கொண்டனர். இவரது இடுக்கண்களை அங்குக் காணப்பட்ட இயற்கை எழில்களும், நிலவளங்களும் மறையச் செய்தன. இயற்கையின் கவின் அவர்களது இன்னல்களை மறக்கச் செய்தது. மாபெரும் மலர்ச் செடிகள் மலர்ந்து கண்களுக்குப் பெரு

**இயற்கை வளம்**

விருந்து அளித்தன. பசுங் கிள்ளைகள் தம் இனிய குரலோடு இறக்கைகளை யடித்துக்கொண்டு மரத்திற்கு மரம் பறந்து சென்றன. கண்ணிற்கினிமை தரும் பற்பல வண்ணம் நிறைந்த பறவைகள் வான வீதியில் பறந்துசென்று தமது எழில் வர்ணங்களைப் பரப்பின. வண்ணக் குயில்கள் கூவிச் செவிக்கு இன்பம் அளித்தன. கடுவன்களும் மந்திகளும் கூட்டங் கூட்டமாய்க் கூச்சலிட்டன; இவர்களை உற்றுப் பார்த்தன. அவற்றின் பார்வை, இவர்களை நோக்கி எள்ளி நகையாடுவது போன்றிருந்தது. இவ்வாறாய பற்பல வளப்பங் கண்ட பிஸாரோ தமது இன்னல் மறந்தார். ஆயினும் உண்ணுதற்குரிய உணவுப் பொருள் மட்டும் ஏதும் கிடைத்திலது. கண்ணிற்கு விருந்து கண்டனர்; செவிக்கு இன்பம் கண்டனர்; வயிற்றுப் பசியைத் தணிக்க எவ்வித விருந்தையும், இன்பத்தையும் கண்டாரில்லை!

**உதவி சேரல்**

இதன்பின் இரண்டொரு தினங்களில் உளவு காணச் சென்ற ரூயி, இவர்களை வந்தடைந்தான். ரூயி, தான் கண்ட வரலாற்றினை விரித்துக் கூறி, டும்பெஸ் மக்களது தோற்றத்தையும் அவர்களது ஆடை அணிகளையும் விவரித்தான். இதற்கு மறுதினமே பனமா சென்றிருந்த அல்மாக்ரோ, பலவாறான உணவுப் பொருள்களுடனும், துணைவராக மற்றுமொரு எண்பதின்மருடனும், சிறிது பண வசதியுடனும் வந்து சேர்ந்தான். பிஸாரோ கொண்ட மகிழ்ச்சிக்கு அளவே யில்லை; சேயைக் கண்ட தாய் போல் ஆயினர். ஒரு சில தினங்கள் அனைவரும் அளவளாவி இன்புற்றிருந்தனர்.

பிஸாரோ தமது பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்தத் தொடங்கினர். கலமும் சான் ஜுவான்

ஆற்றைவிட்டுப் பரந்த கடலில் விரைந்து செல்ல லுற்றது. 'நாமொன்று நினைக்க அது ஒழிந்திட் டொன்றாகும்' என்றவாறு இவர்கள் முன்னேறிச் செல்வதை எதிர்க்காற்று எதிர்ப்பட்டுத் தடைசெய்தது. *காலா தீவின் ஒருபுறம் இவர்கள் கலத்தை நிறுத்த வேண்டியதாயிற்று. இங்குக் காலநிலையை நோக்கிச் சுமார் பதினைந்து தினங்கள் தங்கியிருந்து, பின்பு வானிலை தெளிவுற்றபோது தெற்கு நோக்கிக் கப்பலைச் செலுத்திச் சென்றனர். இம்முறை இவர் சென்ற கரையோரங்கள் யாவும் மிகத் தெளிவாக இருந்தன. அதனைச் சார்ந்திருந்த நிலப்பரப்பும் வளம் பொருந்தியதாகக் காணப்பட்டது. விளை நிலங்களில் தானியங்களும், உருளைக்கிழங்கும், மற்றும் பல்வேறு உணவுப் பொருள்களும் விளைந்து செழித்திருக்கக் கண்டனர். உரம் மிக்க மரங்களும், கனிதரும் செழு மரங்களும் இருக்கக் கண்டனர். இந்த அறிகுறிகளைக் கொண்டு இங்கு வசிப்பவர்கள் நாகரிகம் முதிர்ந்தவர்கள், பயிர் செய்யத் தெரிந்தவர்கள், என பிஸாரோ அறிந்து கொண்டார்.

காலா தீவு

இவ்விதச் சிறப்புக்கள் நிறைந்துள்ள ஒரு நகரருகே பிஸாரோ கலம் விட்டிறங்கி நகர் நோக்கிச் சென்றனர். இவர்கள் எங்குச் சென்றாலும் ஆங்கு வாழ் குடிமக்களால் இவருக்கு இன்னலே விளைந்தது. அவர்களை வசீகரிக்கவோ, அல்லது அவர்களை அடக்கியாளவோ இவரால் இயலவில்லை. தம்முடனிருந்த குழுவினர் வீரம் மிக்கவரேயாயினும் எண்ணிக்கையில் குறைந்தவராவர் அன்றோ?

எதிர்ப்பு

---

* Isla Del Galo

அந் நாட்டு மக்கள் பலர் எதிர்ப்படும்போது இவர்களால் என் செய இயலும். 'புலிக் குழாத்திடையே அகப்பட்ட புல்வாய்கள்' போன்றிருந்தது இவர்களது நிலை.

பிஸாரோவும், சில துணை வீரர்களும் அருகேயுள்ள மக்கள் நிறைந்த ஓரிடத்திற்குச் சென்றார்கள். அவர்களில் ஒரு குதிரை வீரன் தனது திறம் மிக்க செய்கைகளால் அம்மக்களைக் கவர்ச்சியடையச் செய்து அவர்களுடன் தொடர்பு கொள்ளலாம் எனக் கருதினான். தன்னுடைய பரிமா மீது இவர்ந்தனன். காற்றினும் கடுகில், மின்னினும் விரைவில் காற்றையும் பிளந்து சென்றனன். அம் மக்கள் இதுவரை குதிரை யென்ற பிராணியையே கண்டதில்லை. இவ்வளவு வேகமாயோடும் பிராணியைப் பார்த்ததேயில்லை. இக் காட்சியைப் பெரு விந்தையோடு அவர்கள் உற்று நோக்கினர். குதிரையையும் அதைச் செலுத்தும் வீரனையும் ஒரே உயிர்ப் பிராணி என்றே அவர்கள் கருதினர்! என்னே அவர்களது அறியாமை! வீரன் எதிர்பாராத ஒரு சம்பவமும் நேர்ந்துவிட்டது. குதிரை மருண்டு தன்மீது இருந்த வீரனைக் கீழே தள்ளியது. குதிரையினின்றும் வீரன் பிரிந்து விழுந்ததைக் கண்ட அம் மக்கள் கொண்ட வியப்பு அளவிலடங்காது. இதனைக் கண்ட அவர்கள் மெய்ம் மறந்தனர். இவர்கள் தமது சுய நிலையை யடைவதற்குள்ளாக பிஸாரோவும் அவர்தம் குழுவினரும் தாம் தங்கி யிருந்த இடத்தை விரைவில் சென்றடைந்தனர்.

இவ்வாறு அடிக்கடி அந் நாட்டு மக்களால் நேரும் தடைகளைச் சமாளிக்கத் தகுந்த ஆட்கள்

தம்மிடம் இல்லையாதலால் மேலும் தொடர்ந்து தெற்கு நோக்கிச் செல்லச் சிறிது தாமதித்தார். இனி எவ்வாறு மேற்செல்லலாம் என்று தன் உற்ற துணைவர்களான அல்மாக்ரோ, ரூயி ஆகியோரிடம் பிஸாரோ ஆலோசிக்கலானார். ஆயுதங்களும் போர்க்கருவிகளும், போர்வீரரும் பின்னும் அதிகமாக வேண்டியிருந்தது. முடிவாக அல்மாக்ரோ மறுபடியும் பனமா சென்று வசதிகள் பெற்று வர வேண்டுமென்றும், ஏனையோர் காலா தீவில் பத்திரமிக்கதோரிடத்தில் இருந்து வருவது என்றும் தேர்ந்து கொண்டனர். இதன்படி அல்மாக்ரோ ஒரு கலத்துடன் பனமாவை நோக்கிச் செல்ல, பிஸாரோவும் ஏனையோரும் ஆங்குத்தங்கலாயினர்.

பனமாவையடைந்த அல்மாக்ரோ தாம்திரும்பி வந்த செய்தியையும், தாம் இதுவரை கண்டவைகளையும் ஆட்சியாளரிடம் கூறினான். இதனைக் கேட்டுத் திருப்தி யடையாமல், ஆட்சியாளர் சினம் மேலிட்டவராய் அச்சமயமே ஒரு சிறு கப்பலுடன் சென்று பிஸாரோவையும் அவர் தம் குழுவினரையும் திரும்பக் கூட்டிவந்து பனமா சேரும்படி உத்திரவிட்டான். ஆணைக்குட்பட்ட சிறு கப்பலும் ஆட்சியாளரால் அனுப்பப்பட்ட ஆட்களும் காலாதீவை அணுகினர்.

ஆட்சியாளர்

அல்மாக்ரோ, காலாதீவை விட்டுச் சென்ற பின் பிஸாரோவின் குழுவினர் மிகுந்த கஷ்டத்திற்குள்ளாயினர். அவர்கள் ஊக்கமும் தைரியமும் இழந்து சோர்வுற்றனர். பொன்குவியல் காணவிட்டாலும் பொன்னெனப் போற்றும் தமது சொந்த நாட்டை யடையவிரும்பினர் அவ்வீரர். இந்நிலையில் தான், ஆட்சியாளரின் ஆணை வந்துசேர்ந்தது. அவ்வீரரில் பலர் கப்பலில் ஏறி மீள்வதே நலம்

ஊசலாடும் எண்ணம்

என்று கொண்டனர். மற்றும் பலரது உள்ளம் ஊசலாடியது. பிஸாரோவுக்கு மட்டும் திரும்பிச் செல்ல மனம் எழவில்லை முன்வைத்த காலைப் பின்வாங்க விரும்பவில்லை. வெற்றியே பெறினும் தோல்வியே உறினும் பொன்னையோ மண்ணையோ காணாது திரும்பக்கூடாது என்றே அவர் உறுதி செய்து கொண்டார். தமது வீரரின் உள்ளக் கருத்தையும் ஒருவாறு உணர்ந்து கொண்டார்.

இவ்வாறு ஊசலாடிய உள்ளங்கொண்ட வீரர் களின் எதிரே, பிஸாரோ தம் கைவாளினால் கீழே ஒரு கோடு கிழித்து "தோழர்களே! இப்போது உங்களுக்கு ஒன்று உறுதியாகவும் இறுதியாகவும் கூறப்போகிறேன். இதோ இது வடக்குத்திசை; இத் திசையில்தான் நம் ஊராகிய பனமா இருப்பதை நீங்கள் அறிவீர்கள். இது யாதோர் இடையூற்றுக்கும் இடமாகாதது; ஆனால் வன் மைக்கு உறைவிடமாகவுள்ளது. அதோ! அதுவே தென்திசை; ஆங்குத்தான் செல்வ வளத்துடன் பெரு மிளிர்ந்து கொண்டிருக்கிறது. அதைச் சென்றடைவதோ கடினமும் ஆபத்தும் நிறைந்தது. பசிக்கொடுமையும் உடல் உழைப்பும் மிகுதியும் அநுபவிக்க நேரிடும். இவ்வளவு இன்னல்களுக் கிடையே அப் பெரு விளங்கினாலும் அதைக் காண்பதால் இசையும் இன் பொருளும் பெறுவோம் என்பது மட்டும் உறுதி. ஆதலின் நீங்கள் எதனை இப்போழுது மேற்கொள்ளப் போகின்றீர்கள்? பெருவை நோக்கி வருகின்றீர் களா? அல்லது பனமாவை நோக்கிச் செல்லுகிறீர் களா? 'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ' என்னும் உறுதிமொழி உங்கள் நினைவுக்கு வருவ தாக" என்று வீரம் ததும்பக் கூறினார்.

தலைவரின் வீர மொழி

பிஸாரோ உறைத்த இவ்வீரமொழியைக் கேட்ட சிலர் மனம் மாறினர். பிஸாரோ முதலில் கோட்டைக் கடந்து தென்திசை நின்றார். அவரைத் தொடர்ந்து ரூயி வந்தடைந்தார். மற்றும் பதினொரு வர் உறுதியுடன் தம் தலைவன் பக்கம் சார்ந்தனர். ஏனையோர் பனமா திரும்பிச் செல்ல உளங் கொண்டு வாளாயிருந்தனர். அக்கோழையுள்ளம் படைத்தவர்கள் ஆட்சியாளர் அனுப்பியிருந்த கப் பலைச் சேர்ந்தனர். சிறிது யோசனையின் பேரில் ரூயியும் பனமா செல்லத் துணிந்து கப்பலை யடைந் தார். இவர் திரும்பியது கோழை நெஞ்சத்தா லன்று. பிஸாரோவுக்கு உதவி செய்யவே பனமா திரும்பலானர். தான் சென்று ஆட்சியாளரைச் சமாதானப்படுத்தி மறு முறையும் பிஸாரோவுக்கு உதவுவதற்கே சென்றார்.

திரும்பக் கப்பலைச் சேர்ந்தவர்கள் நீங்கலாக பிஸாரோவுடன் பதினொருவரே தங்கினர். ஆட்சி யாளரின் ஆட்கள் சிறிதும் இரக்கமற்றவர்கள். பிஸாரோவின் பிடிவாதத்தைக் கண்டு வெகுண் டனர்; அவரது தீரத்தைக் கண்டு பொறாமை கொண்டனர். பிஸாரோ விடமிருந்து கப்பலையும் பறித்துக்கொண்டு, அவருக்கும் அவரைச் சார்ந் தோருக்கும் சிறிதளவு உணவுப் பொருளும் ஈந்திலர். உண்ண உணவின்றி அவர்கள் இறக்க வேண்டும் என்பது அவர்களின் எண்ணம் போலும்.

எவ்வித ஆதரவுமின்றி பிஸாரோ இணை யற்ற துணை வீரருடன் அத்தீவில் தங்கி யிருந்தார். தானியமணி ஒன்றேனும் அங்கு கிடைப்பது அரிதி னும் அரிதாயிற்று. அத் தீவை நீங்கி வேறிடம் செல்லுவதே தகுதியுடைத்து எனத் தீர்மானங் கொண்டார். கலமோ கைவசமில்லை. கடலைக்

கடந்து வேற்றிடம் புகுவது யாங்ஙனம்? பிஸாரோ இப்பொழுதும் மனந் தளரவில்லை. கட்டைகளைச் சேர்த்துத் தெப்பம் ஒன்று செய்து மிக்க தைரியத்துடன் அதைவிட்டுப் புறப்பட்டார். சில மைல்கள் தூரத்தேயுள்ள *கார்கோனு தீவை யடைந்தனர்.

**கார்கோனு தீவு**

அந்த கார்கோனு தீவு பறவை வேட்டைக்கும், விலங்கு வேட்டைக்கும் உகந்ததாக இருந்தது. இவற்றைக் கொண்டு பசிப்பிணி நீங்கினர். இவ்விடம் பல நாட்கள் எவ்விதக் கஷ்டமுமின்றிக் கழித்தார்கள். தமக்கு உதவி கிடைக்கும் என்ற நம்பிக்கை இழந்தார்கள். துணை வீரர் உற்சாகம் குறைந்தனர். எதற்கும் கலங்கா வீரனான பிஸாரோ கூட மனம் தளர்ந்து தமது வாழ்க்கை இந்தத் தீவிலேயே முடிவடைந்து விடுமோ என்று கூட எண்ணி அஞ்சினர். இந் நிலையில் இவர்கள் விதியை இன்னமும் சோதிப்பதுபோல, பருவநிலையும் மாறுபட்டது. விடாமழை பல நாட்களுக்குத் தொடர்ந்து பொழியலாயிற்று. அனைவரும் கவலை மிக்கவராய் செய்வதறியாது மனங்கலங்கி யிருந்தனர்.

இவ்வாறு அரையாண்டுக்கும் மேலாகத் தங்கி யிருந்தனர். இவர்கள் நெடுநாள் எதிர் நோக்கி யிருந்த உதவிக் கப்பல் ஒரு நாள் தென்படவே செய்தது. வெகு தூரத்துக்கப்பால் ஒரு கப்பல் வந்து கொண்டிருப்பது கண்களுக்குப் புலனாயிற்று. இதனை முதலில் கண்ட வீரனது மகிழ்ச்சி எல்லையற்றது. பெருத்த ஆரவாரம் செய்துகொண்டு தன் குழுவினரை நோக்கி ஓடோடியும் சென்றான்;

---

* Gargona

தான் கண்ணுற்றதைப் பெரு மகிழ்வுடன் கூறி னன். இதனைக் கேட்ட பிஸாரோவும் துணைவர் களும் ஆனந்தக் கூத்தாடினார்கள். தமது துன்பங் களுக்கு ஒரு முடிவு வந்துவிட்டது என்று சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள்.

பிஸாரோவின் உற்ற நண்பர்களான அல்மாக் ரோவும் ரூயியும் மற்றும் பல உதவியாட்களும் அக்கலத்தினின்றும் இறங்கினர். பிஸாரோ அவர் களைப் பேராவலுடன் அணைந்து அழைத்துக் கொண்டார். அவர்கள், பனமா ஆட்சியாளருடன் அரிதின் முயன்று சமாதானப்படுத்தி மறுபடியும் உதவி பெற்று வந்துற்றதை அறிவித்தனர். கைவிடப்பட்ட பொருள் மீண்டும் கிடைக்கப் பெற் றதைப் போன்று மகிழ்ந்தனர்.

இக்குழுவினர் தாம் மேற்கொண்ட முயற்சி யில் முன்னேற முடிவு கொண்டனர். தென்றிசை நோக்கிக் கடலிற் சென்றனர். முன் கண்ட காலா தீவையும் தாண்டி *பசாடோ முனை வரையிற் சென்றனர். வழியே பல இடங்களில் தங்கிச் சென்ற போதிலும் உள் நாட்டிற்கோ, அருகே தென்படும் கிராமங்கட்கோ சென்றார்களில்லை. எவ்வாறேனும் பெருவின் கரையை யடைந்தால் போதும் என்ற எண்ணம் மேலிட்டவராகச் செல்ல லாயினர். கீழ்ப்பாகத்தில் §ஆண்டிஸ் மலைச் சிகரமும், உறைபனி மூண்ட †சிம்பராஸோ சிக ரத்தையும் கண்டனர். தாம் நாடி வரும் நாட்டை நெருங்கிவிட்டதாக விடா முயற்சியுடன் முன்னேறி ‡செயின்ட் எலினா முனையைச் சுற்றி $கயாகுவில் குடாவை அடைந்து விட்டார்.

---

* Cape Passado § Andis † Chimborazo ‡ St. Elena
$ Guayaquil Gulf

இப்பொழுது பிஸாரோவுடன் அந் நாட்டு மக்களும் சிலர் இருந்தனர். இவர்களே முன்பு ரூமியால் நட்புக் கொள்ளப்பட்டவர்கள். அவர்களது நகராகிய டும்பஸை நோக்கியே பிஸாரோ சென்று கொண்டிருந்தார். அந் நகரையும் அடைந்தார். இவர்களது கப்பல் ஆங்குச் சென்றடையவும் அந்நகரவாசிகள் பெருவியப்புடன் இவர்களை உற்றுநோக்கினர். மனத்தில் ஏதும் ஐயமோ அச்சமோ இன்றி இந்த அந்நியருடன் உறவாட ஆரம்பித்தனர்; அவர்களுக்கு உணவு கொண்டு வந்து கொடுத்தனர்.

அவர்களைத் தம் கப்பலுக்கு அழைத்துத் தாராளமாய்ப் பார்வை யிடுமாறு பிஸாரோ அன்புடன் கூறினர். கலத்திலிருந்த பொருள்கள் அவர்கள் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. தாம் இதுவரையில் கண்டிராத துப்பாக்கியும் அதன் சத்தமும் அவர்கட்குப் பெரு வியப்பளித்தன. ஆங்கிருந்த ஒரு சேவல் கத்துவதைக்கூட இவர்கள் அது அக்குழுவினருடன் பேசுவதாகவே கருதினர்! நட்பினரான இந்த டும்பஸ் மக்களினிடையே சின்னாட்கள் தங்கியிருந்தார்.

பெருவையடைய இன்னும் கொஞ்சதூரமே உள்ளது என்பதை யறிந்து இவர்கள் புறப்பட்டுச் சென்றனர். வழியே பல நகரங்களைக் கண்ணுற்றனர். விளை நிலங்களைக் கண்டனர்; நன்கு அமைக்கப்பட்டிருந்த தோட்டங்களைக் கண்டனர்; நீர்ப்பாசன வசதிகளையும் நீர்த்தேக்கங்களையும் கண்டனர். இவர்கள் இதன் பின் *பிளான்கோ முனையைச் சுற்றி மாபெரும் நகரமாகிய † ட்ரக்ஸில்லோ வந்து சேர்ந்தனர்.

---

* Cape Blanco † Truxillo

இந் நகரைக் கண்டதும் பெருவின் திருவைக் கண்டு விட்டதாகவே அனைவரும் மகிழ்வு கொண்டனர். தாம் கனவு என்று நினைத்ததை நனவிலேயே இங்குக் கண்டனர். பொன்னு போற்குவைலான வெற்புகள் இல்லையேனும், ஆறுகளில் மணிக் கற்கள் நிறைந்திருக்க வில்லையேனும், அது செல்வம் நிறைந்த நாடு என்பதைக் கண்டு கொண்டனர். தக்க சாதனங்களுடனும் படைகளுடனும் வந்திருந்தால் உயர்வு நவிற்சியாகக் கூறப்பட்ட அரதனக் குவியல்களை எடுத்துச் செல்வதுமின்றி அந்நாட்டையும் தம் வசப்படுத்தியிருக்கலாம் என்பது கண்டனர். அரும்பெரும் பாடுபட்டு அரதனக் குவியல் இருக்கும் இடம் அறிந்தாயிற்று. பின்னொருக்கால் தக்க வசதிகளுடன் எவர் வேண்டுமானாலும் வந்து அவற்றை எடுத்துச் செல்லலாம் என்ற நம்பிக்கைக்கு வழிகோலி விட்டனர். இத்துடன் திருப்தியடைந்த இக் குழுவினர், அந்நகரவாசிகள் அன்புடன் அளித்த பரிசில்களாகிய அரும்பெரும் பொற்குவியலுடன் பனமா நோக்கித் திரும்பலானார்கள்.

இரண்டாண்டுகளில் பனமா வந்தடைந்தனர். அதன்பின் தம் சொந்த நாடாகிய ஸ்பெயினையும் போய் அடைந்தார் பிஸாரோ. தம் அரசரிடம் தாம் கண்ட புதுமைகளையும், செல்வச் சிறப்பையும் நாட்டின் வளப்பத்தையும் விரிந்துரைத்தார். இவரே பெருவைக் கண்ட பெரியார் என்று, அனைவரும் இவரை வாழ்த்தினர்; போற்றினர். பிஸாரோ மட்டும் தாம் பெருவைக் கண்ட பெருமையை அடைந்ததும் தவிர, பெருவை வெற்றி கொண்டவன் என்ற பெருமையையும் பெறும் போனேமே எனவே எண்ணினர்!



## 2. ராயல் கழகமும் வானிகழ்ச்சியும்

பரந்த இப் பூமண்டலத்தில் பல நிகழ்ச்சிகள் நடைபெறுவது போலவே, வானவெளியிலும் பல அற்புதங்கள் நிகழ்கின்றன. வான மண்டலத்தில் உள்ள கிரகங்கள் தம் நிலைபெயர்ந்து கொண்டே இருக்கின்றன. அவை குறிப்பிட்ட நேரங்களில் தான் நேரு கின்றன. சில கிரகங்களின் பெயர்ச்சிகள் பல்லாண்டுகளுக்கும் பிறகே தோன்றுகின்றன. வான நூல் வல்லுநர் இதனையறிவதில் இன்பங் கொள்வர் இவ்விதக் கிரகப் பெயர்ச்சியைக் காணவேண்டு மேல், உலகிலுள்ள ஏதாவதொரு குறிப்பிட்ட இடத்திலிருந்துதான் காண முடியும்; எல்லா இடங்களிலும் புலனாகாது. அடுத்துவரும் ஆண்டில் குறிப்பிட்டதொரு நாளில் சுக்கிர மண்டலம் சூரியனைத் தாண்டிச் செல்லுகிறதென்றும், அந்த நிகழ்ச்சி தென் பசுபிக் பெருங் கடலில் ஏதேனுமோரிடத்தில் புலனாகும் என்றும் வான நூலாராய்ச்சியாளர்கள் அறிந்தனர். இது வெகு அபூர்வமாய் நேரிடக்கூடிய ஒரு நிகழ்ச்சியாதலின் இதைக் காணவும், இதுபற்றிய தோற்றங்களின் விவரங் கண்டறியவும் அவாவி நின்றனர்.

வான் நிகழ்ச்சி

உலகப் புதுமைகளையும், புது உலகுகளையும் கண்டு, பிரயாணம் செய்து, ஆங்கு வாழ் மக்களுடன் தொடர்பு கொள்ளவேண்டும் என்ற உயரிய கருத்துடன் இங்கிலாந்தில் *ராயல் ஸொஸைடி என்றதொரு கழகம் பாடுபட்டு வந்தது. பல வீரர்களையும், பேரறிஞர்களையும் பற்பல இடங்களுக்கும் அனுப்பி

ராயல் கழகம்

* Royal Society

அவர்கள் மூலம் விவரம் அறிந்து அவற்றை அறிவித்து வந்தனர். இக் கழகம் இதுவரையில் பல முக்கியமான இடங்களுக்குத் தக்க அறிஞர்களை அனுப்பித் தமது பணியை வெற்றிகரமாக நடத்தி வந்தது. சுக்கிர கிரகம் பெயரும் நிகழ்ச்சியையும் காண, தகுதியுள்ள ஒருவரையோ அல்லது ஒரு குழுவினரையோ, தென் பசுபிக் கடலுக்கு அனுப்ப எண்ணிக் கொண்டிருந்தது.

தென் பசுபிக் கடலில் பிரயாணம் செய்வதென்பதும், வான மண்டல நிகழ்ச்சி காண்பதென்பதும் சாமானியமானதன்று. தக்க பேரறிஞர்களாலேயே அது சாத்தியப்படும். அதைக் காண முற்படும் அறிஞர் நாவாய் செலுத்துவதிலும், வான நூலாராய்ச்சியிலும் வல்லுநராக அமைந்திருக்க வேண்டியது அவசியமாகும். இந்த இருவிதத் தகுதிகளும் ஒருங்கே வாய்ந்த ஓர் அறிஞரைக் காண்பது அரிதாயிற்று. *காப்டன் குக் என்பாரே இது காணத் தகுதியுள்ளவர் எனப் பலரும் அபிப்பிராயப் பட்டனர். 1768-ம் ஆண்டில் இப் பணியில் ஈடுபடுமாறு அவரைக் கழகத்தார் நியமித்தனர்.

காப்டன் குக்

இங்கிலாந்தில், † யார்க்ஷயர் பகுதியில் குக் 1728-ம் ஆண்டில் பிறந்தவராவர்; ஏழ்மையிலேயே பிறந்து எளிமையிலே வாழ்ந்து வந்தவர். இளமைப் பருவத்தில் சிறுபண்டகசாலை ஒன்றில் பணியாற்றி வந்தார். அப் பணியை அவரது தகப்பனரின் வற்புறுத்தலின் பேரிலேயே செய்துவந்தார். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கிணங்க, அவரது கருத்து, இளமைப் பருவத்திலேயே, வீரச் செயல்கள் விளைவிக்க விழைந்து நின்றது. ஊக்கமும் மனோ வேகமும் கொண்ட இவ்விளைஞர் பண்டக்

* Captain cook † Yorkshire

சாலைப் பையனாக இருப்பதில் விருப்பம் கொள்ள வில்லை. மாலுமித் தொழில் அவர் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. வெறுப்புக்கொண்ட ஒரு தொழிலைத் தொடர்ந்து நடத்துவது யாங்ஙனம்? ஆகவே, ஒரு நாள் ஒருவருமறியாது †விட்பி நகர் நோக்கிச் சென்றுவிட்டார். ஆங்குப் பலரையும் அண்மி, ஒரு கப்பலில் பணியாளாக அமர்ந்தார். தமது பேரூக்கத்தாலும், பேருழைப்பாலும், சீரிய ஒழுக்கத்தாலும், அறிவாற்றலாலும் அனைவரது நன் மதிப்பையும் பெற்றார்; தம் நிலையில் படிப்படியாக உயர்வுபெற்று வந்தார். பல போர்க் கப்பல்களிலும் திறம்பட வேலை பார்த்து வந்தார்.

தமது மேன்மையான உழைப்பினால் குக், ஒரு கப்பற்றலைவன் பதவியை எய்தினார்.

> ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
> ஊக்கம் உடையான் உழை

என்பது மணிமொழியன்றோ? *செண்ட் லாரன்ஸ் பிரதேசத்தில் நேரான கப்பல் வழி காணுவதில் வெற்றி கொண்டார். இவர் மேற்கொண்ட பல பயணங்களிலும் தமது உயிரையும் மதியாது பணியையே பெரிதும் மதித்துப் பிழையறச்செய்து வந்தார். அவரிடம் விடப்படும் எந்த வேலையிலும், வெற்றியையன்றி மற்றொன்றை எவரும் எதிர் பார்ப்பதில்லை; அவரிடம் ஆழ்ந்த நம்பிக்கை கொள்வர். தனக்குச் சிறிது ஓய்வு கிடைத்த நேரங்களில் கணித நூலிலும், வான நூலிலும் கவனம் செலுத்தி, தேர்ச்சி பெற்றார். பசுபிக்கில் பிரயாணம் செய்ய இத்தகைய தகுதிகளையுடைய இவரைத் தேர்ந்தெடுத்து நியமித்ததில் வியப்பேது மில்லை.

---

† Whitby * St. Lawrence

இப்பெரு முயற்சிக்குத் தலைமைதாங்கி நடத்துவதாக ஏற்றுக்கொண்ட காப்டன் குக், கழகத்தின் சார்பில் அதற்குத் தேவையானவற்றை ஆயத்தம் செய்யத் தொடங்கினார். கப்பல் ஒன்றைத் தக்க வசதிகளுடன் புதுப்பித்தனர். அவர்கள் கொள்ளப்போகும் அரும் பெரும் முயற்சியின் பெயராலேயே அக்கலத்திற்குப் †'பெரு முயற்சி' என்ற பெயரையே பொறித்தனர். ஓராண்டுக்கும் மேலேயே தேவைப்படும் உணவுப் பொருள்களும் சேகரிக்கப்பட்டன. உரம் மிக்க வீரர் பலர் நியமிக்கப்பட்டனர். அறிஞர் பலர் இப் புதுமைகாண ஆவலூன்றி இக்குழுவில் கலந்தனர். விஞ்ஞானத் துறையில் சிறந்து விளங்கிய *பாங்க்ஸ் என்னும் பெருமகனார் குழுவினருள் ஒருவராவர். விஞ்ஞானத் துறையில் பேரறிவாளராகவும், அத் துறையில் புதுமை காணுவோர்க்குத் தக்க கொடையாளராகவும் இலங்கியவர் இவர். இயற்கை எழிலின் நுட்பமறிந்து தாவர நூற்கலையில் சிறந்து விளங்கிய ‡டாக்டர் ஸோலாண்டர் என்பார் பெறற்கரிய இப்பெரு முயற்சியில் பங்கெடுத்துக் கொண்டார். இத்துணைச் சிறப்புக்கள் வாய்ந்த பேரறிஞர்கள் குழுவில் கலந்திருந்தும், அதற்குத் தலைமை வகிக்கும் பெரும் பொறுப்பு காப்டன் குக்கைச் சார்ந்திருந்ததெனில் அவரது அருமை பெருமைகளைச் சொல்லவும் வேண்டுமோ?

'பெரு முயற்சி'

கரைதனில் பலர் நின்று களிகூர்ந்து வெற்றி முழக்கம் செய்து விடையனுப்ப, 1768-ம் ஆண்டு 'பெரு முயற்சி'க் கலம், தான் கொண்டுள்ள பெரு முயற்சியில் வெற்றித் திருவைக் கொணர அலைகடலில் ஆடியோடத் தலைப்பட்டது. வழியே பல துறைகளில் தங்கிநின்று தென் அமெரிக்காவை

‡ Endeavour * Banks † Dr. Solander

அணுகி *ரயோ-டி-ஜனிரோ என்ற சிறந்த துறை முகநகர் புக்கனர். குழுவினர் வந்து சேர்ந்த செய்தி ஆங்குள்ள போர்த்துகீசிய ஆட்சியாளருக்கு அறிவிக்கப்பட்டது. 'இவர்கள் இங்கு எதற்கு வந்துற்றார்கள்' என்பதை அவர் அறிந்து கொள்வதே அரிதாயிற்று. 'புதுமை காணவேண்டும் என்று இவ்வாறும் வருவார்களோ? நல்லெண்ணத்துடன் எக்காலும் எவரும் இவ்விதம் வரமாட்டார்கள். இதில் ஏதோ சூழ்ச்சி உளது' என்று ஆட்சியாளர் ஐயுற்றார். 'வான வெளியிலுள்ள கிரகம் எவ்வாறு புலனாகும்? சுக்கிரன் சூரியனைத் தாண்டினாலோ, சூரியன் சுக்கிரனைத் தாண்டினாலோ இவர்கட்கு ஆவதென்? அதனைக் காண இங்கு ஏன் வரவேண்டும்?' என்றது அவனது அறியாமையுள்ளம்! ஆட்சியாளனது அறியாமையை எண்ணி யெண்ணி ஆச்சரியமுற்றனர் ஆங்கிலேயர். அவர்கள் அங்குத் தங்கவுமில்லை. புறப்பட்டு வேறொரு சிறு தீவில் இறங்கினார்கள்.

ஆட்சியாளரும் ஆங்கிலேயரும்

இத் தீவில் இவர்கள் தங்கியிருந்த காலத்தில் கடும் பனியும் குளிரும் மூண்டன. தவிரவும் அது மலை சார்ந்த பிரதேசம். ஆதலின் இரவுகளில் குளிர் தாங்க முடியாததாக இருந்தது. கடல்கடந்த களைப்பும், வழி நடந்த இளைப்பும் குழுவினரை மிகக் கஷ்டத்தில் ஆழ்த்தின. பல நாட்கள் கண் விழித்தவர்களாதலின் 'கவலையற்று எப்பொழுது கண் துஞ்சுவோம்' என்ற அவா மேலிட்டவராயினர். அக் கடும் பனியில் திறந்த வெளியில் உறக்கங்கொண்டால் இறக்க வேண்டி

கண் விழிப்பும் கடும் பனியும்

* Rio-de-Janerio

யதே முடிவாகும். இது அவர்கள் அனைவரும் அறிந்ததானாலும், டாக்டர் ஸொலேண்டர், அவர்களுக்கு அதனை எச்சரிக்கை செய்தார். பக்கத்தே வசதியாக உள்ள ஓர் அடக்கமான இடத்தில் நெகிடித் தீ மூட்டி அதன் பக்கலில் உட்கார்ந்து குளிரைச் சிறிது போக்கிக் கொள்ள முடிவு செய்தனர். அதற்காகச் சிலர் முன்னே சென்றனர். எஞ்சி நின்ற மற்றெல்லோரும் ஒருவாறு குளிரையும், விஞ்சி நின்ற உறக்க உணர்ச்சியையும் பொருத்துக்கொண்டு வழி நடந்தனர்.

சிறிது தூரம் சென்றதும் யாவரினும் டாக்டர் ஸொலேண்டரே உறக்கம் தவிர்க்க முடியாதவர் ஆனார். அவ்வாறு உறக்கங் கொள்ளலாகாது என உணர்த்தியதும் அவரேதான்; உறங்கியதும் அவரேதான்! சில விநாடிகளேனும் உறங்க வேண்டும் என்பது அவரது பல நாளைய அவாவாக இருப்பின், அவர் கொண்டிருந்த களைப்பு எவ்வாறிருந்திருக்கும்? நெகிடித் தீ மூட்டியபின் அவரைத் தூக்கத்துடனேயே அவ்விடம் எடுத்துச் சென்றனர். இக் குழுவுடன் பயணம் செய்துவந்த இருவர் குளிரினால் வழியில் இறந்தொழிந்தனர். இந்த டாக்டர் ஸொலேண்டரும் மற்றையோரும் கடுங் குளிருக்கு ஆளாகாது தப்பிப் பிழைத்தது இறைவனது இன்னருளாலேயாகும்

பல நாட் பயணத்திற்குப்பின், *ஹார்ன் முனையைச் சுற்றி †மெஜிலன் குறு நீர்ப் பரப்பை யடைந்தனர். பஸிபிக் பெருங் கடலை அண்மிவிட்டோம் என அனைவரும் ஆனந்தங் கொண்டனர். ‡டாஹிடி என்னும் தீவின்பால் கலம் நிறுத்திக் கரையிறங்கி,

---

* Cape Horn † Magellan Straits ‡ Tahiti

அத் தீவில் தங்கினர். ஆங்கு வாழ் மக்கள் இக் குழுவினரை விரும்பி வரவேற்றனர். மரக்கிளைகளையும் இலை, தழை, செடிகளையும் தூக்கி நின்று ஆட்டிக் காட்டி வரவேற்பது அவர்தம் மரபுபோலும்! அவர்கள்கொண்ட அன்பினால் பெருங் குழுவாகத் திரண்டு வந்தது, ஒரு பெருங் காடே நிலைபெயர்ந்து வருவது போன்றிருந்தது. பலர் நாட்டுப் படகுகளிலும் சிறு தெப்பங்களிலும் மிதந்து வந்து 'பெருமுயற்சி'க் கலத்தையடைந்து குக் முதலியோருடன் அளவளாவினர்.

டாஹிடி தீவில் வாழும் மக்கள் பரிசுத்தமாகவும், முகப் பொலிவுடனும், அழகிய தோற்றத்துடனும் காணப்பட்டனர். மேற் கையிலும் முன் கையிலும் நெற்றியிலும் பச்சை குத்திக் கொள்ளுவதில் பெரு விருப்பங் கொண்டவர்கள். கொடிகள், பூக்கள் போன்ற உருவங்களைப் பச்சையால் பொறித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் எளிய வாழ்க்கை முறையை மேற்கொண்டவர்கள்; ஆடம்பரத்தில் ஆசையற்றவர்கள். வெறுப்பின்றி விருந்தோம்பும் விருப்புக் கொண்டவர்கள். தானியங்கள் பயிரிட்டும், நெசவுத் தொழிலில் இழைந்தும், வேலைப்பாடுள்ள பல்வகைக் கூடைகள் முடைந்தும் அவற்றில் கிடைக்கும் ஊதியங்கொண்டு உயிர் வாழ்ந்து வந்தனர். எளியவர்களாயினும் நேசப்பான்மை வாய்ந்தவர்கள்.

டாஹிடி தீவு

இந்த டாஹிடி தீவுதான் சுக்கிர° மண்டலப் பெயர்ச்சி நேருவதைக் காண்பதற்குத் தெரிந்தெடுத்துள்ள இடமாகும். அந் நிகழ்ச்சியைக் கண்ணுறும் வரையில் குக் குழுவினர் அத்தீவில் தங்கியிருக்க வேண்டியதாயிற்று. ஆங்கு அவர்கள் எவ்

விதத் தொந்தரவுமின்றிப் பல மாதங்கள் சுகமே தங்கி யிருந்தனர். வான மண்டலத்தை ஆராய்வதற்கு அத்தீவு அமைந்துள்ள இடம் மிகப் பொருத்த முள்ளதாக இருந்தது. குக், டாக்டர் ஸொலேண்டர், பாங்க்ஸ் பெருமகனார் முதலியோர் பற்பல ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு, வெற்றி கண்டு கொண்டிருந்தனர். சுக்கிர நிகழ்ச்சியைக் காணும் நன்னாளை ஆவலுடன் எதிர் நோக்கி நின்றனர்.

தீவினர் திருட்டுத்தனம்

இவர்கள் இங்குத் தங்கி யிருந்த காலத்தில் அங்கு வாழ் குடிமக்கள் அடிக்கடி இக் குழுவினரிடம் வந்து போய்க் கொண்டிருந்தனர். இக் குழுவினர் இம்மக்கள் பால் பூண்டுள்ள நேசத்தால் அவர்களைத் தாராளமாய்த் தங்களுடன் புழங்கும்படி விட்டிருந்தனர். தாங்கள் இதுவரையில் கண்டறிந்திராத பல பொருள்கள் குக் இடம் இருப்பது கண்டு அவற்றில் நாட்டங் கொண்டனர். இத் தீவு வாழ் மக்கள். ஒரொரு சமயத்தில் எவருங் காணாத நேரத்தில் அவரவர் விருப்பங்கொண்ட பொருள்களைக் களவாடிச் சென்றனர். அவற்றை விரும்பிக் கேட்டாலும் கொடுக்கும் பெருந்தகைமை பூண்ட குழுவினரிடமும் திருட்டுத்தனம் நிகழ்த்தத் தொடங்கினர்! இக் களவுத் தொழிலிலும் அவர்கள் வல்லுநர் போலும்! இம் மக்கள் இப் பொருள்களைக் கவர்ந்தது வறுமையாலன்று; அவற்றின் புதுமைத் தோற்றமே அவர்களை இவ்வாறு ‘களவு கொள்ளச் செய்தது. எவ்விதத்தாயினும் அது களவுதானே? அத் தீவிலுள்ள தலைவனொருவன் நேரிடையாகவே, ஆங்கு அவன் பெரிதும் புதுமையாகக் கண்ட துப்பாக்கி ஒன்றை, பாங்க்ஸ் பெருமகனாரிடமிருந்து பிடுங்கிக்கொண்டு ஓடிச் சென்றான். இதற்குமுன் அவன் இவ்வித ஆயு

தத்தைக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. ஒரு மறைவிடம் சென்று அதைப் பரிசீலிக்கலானான். அவன் கை, துப்பாக்கிக் கையடியில் பொருந்தவே அது இயங்க ஆரம்பித்தது. அது வெடித்ததனாலேற்பட்ட அதிர்ச்சியால் அவதியுற்றான்; வெடிச் சத்தம் கேட்டு மனமொடிந்தான். அதைத் தான் திருடி எடுத்து வந்ததினால் அது தன்னைத் தண்டித்தது என்று அதனிடம் அச்சங் கொண்டான் போலும்! அதை விட்டெறிந்து திரும்பியும் பாராது ஓடோடியும் சென்று மறைந்தான் அத்தலைவன். அத்துப்பாக்கி வெடி தன்னைத் தொடர்ந்து வரும் என நினைத்தான் போலும்!

இம் மக்களது திருட்டுத் தொழிலை அறிந்து கொண்டபோதிலும் அவர்களை இச் செய்கைகளுக்காக ஒன்றும் செய்யவில்லை. தம் குழுவினருள் எவரும் அம்மக்களுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்கலாகாது எனவும் திட்டம் செய்தார். என்னே அவரது பெருந்தன்மை! குக் இவ்வாறு பெருந்தன்மையுடன் நடந்து கொண்டதற்குத் தக்க காரணமும் உண்டு. அல்லல் பல பெற்று அலைகடலைத் தாண்டியும் காண்பதற்கரிய அரும் பெரும் நிகழ்ச்சிகளையும் காணவேண்டிய இடத்தினை அடைந்தும் அம் மக்களிடம் ஏதும் விரோதம் கொண்டால் தாம் மேற் கொண்டுள்ள பணியில் தாம் வெற்றி காண இயலாமற் போவதோடு தமது உயிருக்கும் தீங்குநேரிடும் எனவும் குறிப்பாயறிந்து கொண்டார். உயிர் நீப்பது பற்றி அவர் கவலைகொள்ளவில்லை; தாம் கொண்ட பணி நிறைவேறாமற் போனால் என் செய்வது என்பதே அவரது கவலை.

வான மண்டலத்தில் நேரும் நிகழ்ச்சியைக் கவனிக்க வேண்டிய நன்னாளும் வந்துற்றது.

1769-ம் ஆண்டு ஜூன் மாதம் மூன்றும் நாளன்று, எதிர் நோக்கிய சுக்கிரனின் கதிமாற்றம் நேர்ந்தது. ஆராய்ச்சியாளர்களான குக், பாங்க்ஸ் பெருமகனார், டாக்டர் ஸொலேண்டர் ஆகியோர் அந் நிகழ்ச்சிகளின் கணிதக் குறிப்புக்களையும் தோற்றங்களையும், சிறிது பிழையுமின்றிக் குறித்துக் கொண்டனர். தாம் மேற்கொண்ட பணியில் வெற்றி கொண்டது பற்றிப் பெருமிதம் கொண்டனர். எவ்வளவோ ஆண்டுகளுக்குப் பிறகு நேரிட்ட இந் நிகழ்ச்சியைக் காணும் பெருமையை இக் குழுவினர் கொண்டனர். அவர்கள் காணவந்த நிகழ்ச்சி முடிவுற்றது. இனி அவர்கள் அங்குத் தங்கவேண்டியது அவசியமில்லாததாயிற்று. வெகு விரைவில் அதைவிட்டுப் புறப்பட்டுச் செல்ல ஆயத்தம் செய்தனர்.

வனிகழ்ச்சியும் ஆராய்ச்சியும்

டாஹிடி தீவு மக்களுக்கு இவர்களது செயல் ஒன்றுமே புரியவில்லை. இவர்கள் வானை அண்ணாந்து பார்ப்பதுவும், கணிதம் குறித்துக்கொள்ளுவதும், ஒருவருக்கொருவர் பேசி மகிழ்ந்துகொள்ளுவதும் கண்டு அவர்கள் ஏதும் புரியாது விழித்தனர். 'இவர்கள் வான மண்டலத்தில் குடியேறப் பார்க்கிறார்களோ? அதனை வெற்றிகொண்டு ஆளப் போகின்றனரோ' என ஆச்சரியமுற்றனர். கழுதை யறியுமோ கற்பூர வாசனை! அத் தீவை விட்டு அவர்கள் பிரிந்துசெல்ல ஆயத்தம் செய்வதை அவர்கள் அறிந்தனர். அம் மக்களின் தலைவனும் அவனது அருமை மனைவியும் கரையிலுள்ள கலத்திற்கு வந்தனர். குக் இவர்களுக்குத் தக்க வரவேற்பு அளித்து அழைத்துக் கொண்டார். தலைவன் தன்னுடன் கொணர்ந்த பல பொருள்களை குக்கிற்

மக்களின் மடமை

குப் பரிசிலாக வழங்கினான். காப்டன் குக்கும் அவர்கட்கு மாற்றுப் பரிசில் அளிக்க விரும்பினார். ஆனால் அவர்கள் எதையும் ஏற்க விரும்பவில்லை. தலைவனின் மனைவி தனக்குத் தேவையென ஆங்குக் காணப்பட்ட அற்புத வேலைப்பாடுகள் உள்ள பதுமை யொன்றினைப் பற்றிக்கொண்டு பெருமிதமடைந்தாள். தலைவியின் கையிற்கண்ட பொருளைப் பார்த்துத் தலைவன் பொறாமை கொண்டான். மனைவியின்பால் பதுமைக்காகப் பொறாமை கொள்ளும் மன்னவன் போலுமிவன்! சின்னாட்கள் ஆங்குத் தங்கி அவ்வன்புள்ள மக்கள் தாங்கொணா வருத்தத்துடன் வழியனுப்ப குக்கும் குழுவினரும் அவர்களைப் பிரிந்து சென்றனர்.

அரும்பெரும் ஆற்றல் படைத்த இந்த ஆங்கிலேயர்கள், அந்த ஆழ்ந்த அலைகடலில் நாவாய் செலுத்திப் பல புதிய தீவுகளையும் கண்டனர். தாம் பிரயாணம் செய்துவரும் கழகத்தின் சார்பில் அத்தீவுக் கூட்டங்கட்குக் *கழகத் தீவுகள் எனப் பெயரிட்டு மகிழ்ந்தனர்.

புதுமைத் தீவுகள்

பல இடங்களில் இக்குழுவினர் தங்க நேரிட்டது. ஆனாலும் தாம் முன்பு தங்கி நின்ற டாஹிடி நாட்டு மக்களைப்போல் இத்தீவிலிருந்தோர் நேசமாயிருக்கவில்லை. ஈட்டி, கோடாரி முதலிய ஆயுதந்தாங்கிய பல உள்நாட்டு மக்களை யெதிர்த்துப் போராடவேண்டியிருந்தது. துப்பாக்கிகளை வெடித்தும், சிலரைச் சுட்டு வீழ்த்தியும் அவர்களிடமிருந்து தப்ப வேண்டியதாயிற்று. பற்பல பேராபத்துக்களையும் தாண்டி †நியூ ஸீ லாந்து வந்தடைந்தனர்.

---

* Society Islands † New Zealand

இதற்கு முன் † டாஸ்மன் என்ற ஒரு டச்சு நாட்டு அறிஞர் இப் பகுதிக்கு வந்திருந்தும் உள் நாட்டில் எவரும் இவருக்கு முன்பு பிரயாணம் செய்தவரிலர். காப்டன் குக்கின் குழுவினர்தான் இத்தீவின் உட் பிரதேசங்களைக் கண்டு விவரமறிந்தனர். இத் தீவிலும் அவர்கள் தம்மைத் தற்காத்துக் கொள்ளப் போராட வேண்டியிருந்தது.

**விநோதப் பழக்கம்**

நியூ ஸீ லாந்துத் தீவில் இக் குழுவினர் பல மாதங்கள் தங்கியிருந்தனர். இது இரண்டு தீவு களைக் கொண்டது. இவ்விரண்டு தீவுகளின் பல இடங்களுக்கும் குழுவினர் சென்று வந்தனர். வட பாகத்தில் சில பகுதிகளில் மனிதரைத் தின்னும் மரபினர் நிறைந்திருந்தனர். வான மண்டலத்தைக் காண வேண்டுமென்னும் விஞ்ஞான வளர்ச்சியுற்றிருந்த அக்காலத்திலும்கூட, ஒரு பகுதியில் மனிதரைத் தின்னும் மரபினர் இருந்திருக்கிறார்கள்! இவர்கள் தங்களுள் ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டு எளியவரை வலியவர் விருந்துகொள்வர். இம் மக்கள் சில விநோதமான பழக்க வழக்கங்களை மேற்கொண்டிருந்தனர். கணவனை யிழந்த பெண்டிர், தாங்களாகவே தங்கள் கை கால்களில் காயங்களை யுண்டு பண்ணிக்கொண்டு கதறினர். ஒருத்தி எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமான காயங்களைச் செய்து கொள்ளுகிறாளோ அவ்வளவுக்கு அவ்வளவு அவள் தன் கணவன்பால் கொண்டிருந்த அன்பை அளவிடும் குறியீடாகக் கருதப்பட்டது. ஒரு காலத்தில், கணவனை இழந்தவள் உடன்கட்டையேறி உயிர் நீப்பதும், உயிருடன் இருப்பின் கடும் விரதம்பூண்டு கைம்மைக் கோலம் பூணுவதும் நம் நாட்டிலும்

---

† Tasman

மேற்கொள்ளப்பட்டது. இவ்வாறு செய்து கொள்வது இவர்கள் இயல்பு போலும்!

நாகரிகம் முதிர்ந்த பொற் காலத்திலும், அந்த இடங்களில் வாழ்பவர்கள் கற்கால மக்களாகவே இருந்து வந்தனர். கற்களைக்கொண்டு கூர்மையான ஈட்டி, கோடரி முதலியவற்றைச் செய்து கொண்டனர். இரண்டு ஆள் உயரத்திற்கும் மேற்பட்ட கற்களாலான ஈட்டிகளை அவர்கள் தாங்கிநின்று சண்டையிடுவது இயல்பென்றால் அவர்களின் உடல்திறம் எத்தன்மையதாக அமைந்திருக்க வேண்டும்! குழுவினருள் ஒருவரும் இவர்களுக்குப் பெருவிருந்தாகாது தப்பியதே கடவுள் செயலாகும்.

**கற்கால மக்கள்**

அவ் விநோதமான கியூ லீ லாந்துத் தீவை விட்டுப் புறப்பட்ட 'பெரு முயற்சிக் கலம்' அப் பரந்த கடலில் விரிந்த பாய் விரித்துக் குழுவினரைத் தாங்கி, மேற்கு நோக்கி மிதந்து சென்றது. அத் திசையில் பெரியதொரு நிலப்பகுதி இருப்பதாக அறிந்து அதை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர். இவ்விதம் சுமார் ஒரு திங்கள் பிரயாணம் செய்து ஒரு விரிகுடாவை அடைந்தனர். ஆங்குத் தென்பட்ட ஒரு பெரிய நிலப்பரப்பில் ஒரு சோலையினருகில் கப்பலை நிறுத்தி, அச்சோலையில் தங்கினர். பல நாட்கள் கருங்கடலில் கடும் பயணம் செய்து களைத்துச் சோர்ந்து வந்திருந்த அக் குழுவினருக்குப் பசுமரச் சோலையும், வண்ணமிக்க மலர்ப் புதர்களும், செடி கொடிகளும், தண்ணென்று வீசும் தென்றல் காற்றும் உள்ளத்திற்கும் உடலத்திற்கும் மகிழ்ச்சியையும் சுகத்தையும் கொடுத்தன. அச் சோலையில் பலவிதத் தருக்களும்

**தாவரச்சோலை**

வகைவகைப் பூப் புதர்களும், மருந்து மூலிகை களும் மிகுந்து விளங்கின. அந் நிலப் பரப்பு முழு வதுமே அவ்வாறு நிறைந்திருப்பதாகவே தோற் றியது. தாவரங்கள் பலவும் தளிர்ந்து மிளிரும் அந்தப் பகுதியைத் தாவரப் பிரதேசம் எனப் பொருள்படும் *பாட்னி விரிகுடா எனப் பொருத்த மாகப் பெயரிட்டனர்.

சில நாட்கள் இந்தப் பிரதேசத்தில் இனிதே தங்கியிருந்து வடக்கு நோக்கிக் கலத்தைச் செலுத் தினர். பல இடங்களில் தங்கினர். தாம் சென்ற இடங்களி லெல்லாம் வானளாவும் வலிய பெரிய மரங்களும், இடைவெளியே சிறிதுமில் கோசுகுப் லாத அடர்ந்த புதர்களும், உருண்டு படை நீண்டு படர்ந்திருந்த கொடிகளுமே நிறைந்திருந்தன. பல விநோதப் பிராணிகளும் தென்பட்டன. குன்றெனத் தோற் றமளிக்கும் பெரும்புற்றுக்களில் கறையான் எறும் புகள் எண்ணற்றுக் கோடிக்கணக்கில் பல்கிக் கிடந்தன. நீருண்ட கரிய இருள் கொண்ட மேகம் போலக் கொசுகுகளின் கூட்டம் பறந்து வந்த டைந்தன. தமக்கே உரித்தான அச்சோலையில் வந்த அந்நியரை வெருட்ட அவைகள் படை யெடுத்து வந்தன போலும்! பெரும்படைக்கும் பயப்படாது, ஈட்டி கோடரிக்கும் அஞ்சாது எதிர்த்து நிற்கும் இக் குழு, இக் கொசுகுப் படைக்குப் பின்னிட்டோட வேண்டியதாயிற்று!

பிறிதோரிடத்தில் 'பெரு முயற்சிக் கலம்' பெருங்கடலில் ஆழ்ந்து விடவும் நேர்ந்தது. ஆழி யின் ஆழம் காண்பதில் ஆற்றல் வாய்ந்த காப்டன்

---

*Botany Bay

குக், திடீரென ஓரிடத்தில் ஆழம் குறைவுற்றதை யறிந்தார். முன்னெச்சரிக்கையோடு நடுக் கடலில் கலத்தைத் திருப்பினர். ஆங்கும் ஆழம் போதுமானதாக இருக்கவில்லை.

**கடலிற் கற்பாறை**

துன்பம் வந்தால் தொடர்ந்து வருமன்றோ? அக் கடலில் மூழ்கியுள்ள பாறை யொன்றில் கலத்தின் கீழ்த்தளம் மோதலுற்றது; கடல் நீர் கலத்தினுட் புகத் தொடங்கியது. கப்பலிலுள்ளோர் உற்ற கலக்கத்திற்கு எல்லையுமுண்டோ? கீழ்ப் பரப்பிலிருந்த உணவுப் பொருள்கள், வெடி மருந்துகள், மற்றும் பல பொருள்களையும் அப்புறப்படுத்தி மேற் தட்டிற்குக் கொணர்ந்தார்கள். பலரும் பாடு பல பட்டு யுக்தி புத்தித் திறமையால் ஆங்குக் கிடந்த கித்தான்களையும், பாய்களையும் மற்றும் பல விரிப்புக்களையும் கொண்டு சிறிது பழுது பட்டிருந்த இடங்களிற் செருகித் தண்ணீர் உட்புகாதபடி பொருத்தி விட்டனர். கலமும் ஒருவாறு காப்பாற்றப் பட்டுவிட்டது. இப் பேராபத்தி னின்றும் காப்பாற்றியதற்கு இறைவனுக்கு அனைவரும் மண்டியிட்டு நன்றி செலுத்தினர்.

பழுதுற்ற கலம் தற்காலத்திற்கு உதவும்படி தக்கவாறு செப்பனிட்டு ஆஸ்திரேலியாவின் வட கிழக்குப் பகுதியின் கரையோரமாகச் செலுத்திச் சென்றனர்.

**படேவியாவும் பசிப்பிணியும்**

கிழக்கிந்தியத் தீவுகளையும் பார்த்துவிட்டு, *ஜாவா தீவில் †படேவியா என்னும் இடத்தை யடைந்தனர். குழுவினரைப் பிடித்த துன்பம், கலம் கெட்டதுடன் நிற்கவில்லை. வெப்ப நிலையும், பக்குவமில்லாத உணவு

---

* Java † Batavia

களும் குழுவினருக்கு வெப்பக் கொப்புளங்களைத் தோன்றச் செய்தன. இதனால் பலர் மிகுதியும் துன்பப் பட்டன. புதிய உணவுகளையும் தமக்குப் பிடித்தமான இறைச்சிப் பொருள் முதலியவற்றையும் புசிக்க மிகவும் இச்சை கொண்டனர். ஆங்குள்ள பல பெரு வணிகர்களிடம் சென்று மன்றாடிச் சிறிது உணவுப் பொருள்களைப் பெற்று வந்தனர் 'யானைப் பசிக்கு அவல் பொறி' போல் அவர்கள் கொண்டிருந்த மிகுந்த அவாவை இது தணிக்கவில்லை. இருப்பினும் சிறிதளவாவது கிடைத்ததுபற்றிச் சிறிது மகிழ்ச்சி கொண்டனர். பெருமுயற்சிக் கலத்தைச் செப்பனிடாது இனி மேலும் கடலிற் செல்லுவது ஆபத்தாக முடியும் என்று கண்டனர். ஆனதால் சில மாதங்கள் அவ்விடம் தங்கியிருந்தேனும் கப்பலைச் சீர்திருத்தியபின் செல்லுவது தான் அறிவுடைமை என்று கண்டனர். அவ்வாறே அங்குத் தங்கிக் கப்பலைச் சீர்திருத்தத் தொடங்கினர்.

சீர்ப்பட்ட பெருமுயற்சி

அவர்கள் தங்கிருந்த பிரதேசம் வெப்பம் மிக்கது. ஆங்குள்ள நீர் நிலைகளும் சுத்தமானவைகளாக இருக்கவில்லை. கொசுகுகளும் மல்கி இருந்தன. இவ்விதச் சூழ்நிலையிலுள்ள அந்த இடத்தில் மலேரியா என்னும் குளிர்சுரம் தலை விரித்தாடியது. குழுவினருள் பலர் இக் கொடு நோய்க்கு இரையாயினர். இவ்வாறாய இன்னல்களுக் கெல்லாம் ஆளாகி யிருந்தும், கலத்தைச் சீர்ப்படுத்துவதில் எவரும் சோம்பினாரில்லை. ஒரு சில மாதங்களில் 'பெரு முயற்சியும் கடலில் செல்லத் தக்க நிலையை எய்தியது.

கப்பலைப் பற்றிய கவலை ஒருவாறு நீங்கியதும் இக் குழுவினர் கடற் பிரயாணத்தைத் தொடர்ந்

தனர். ஆப்பிரிக்காவின் தென் முனையிலுள்ள *நன்னம்பிக்கை முனையைச் சேர்ந்தனர். இவர்கள் இது நாள் வரையில் கொப்புளங்களாலும் குளிர் சுரத்தாலும் பட்ட துன்பங்கள், இங்கு வந்தடைய வும் சிறிது குறையலாயிற்று. ஆங்கு வீசிய தென்றல் காற்று தண்ணென வீசியது. இக் காற்று நோயுற்றிருந்த இவர்களுக்கு மிக்க நன்மையையே தந்தது. சிறிது சிறிதாக அவர்கள் குணமடைந்து வந்து, சில தினங்களில் தமது நோய் தீர்ந்தனர். மற்றும் சில மாதங்கள் தம் சொந்த நாட்டை நோக்கிச் செல்லுவதில் ஈடுபட்டிருந்தனர். 1771-ம் ஆண்டின் இடைப் பகுதியில் இங்கிலாந்து வந்து சேர்ந்தனர்.

சொந்த நாட்டில் வரவேற்பு

அரும்பெரும் ஆராய்ச்சிகளையும், புதிய பல தீவுகளையும் கண்டறிந்து சற்றேறக்குறைய மூன்று ஆண்டுகள் கடலிற் பிரயாணம் செய்த காப்டன் குக் தம் சொந்த நாட்டை யடைந்ததும் பெற்ற மகிழ்ச்சிக்கோர் அளவு முண்டோ? காப்டன் குக்கும் அவரது குழுவினரும் இங்கிலாந்து வந்தடைந்ததைச் செவியுற்ற உற்றார் உறவினரும், நண்பர்களும் பிறவோரும், ராயல் கழகத்தாரும் அவர்களை வரவேற்றுப் பாராட்டினர். வானிகழ்ச்சியில் கண்ட ஆராய்ச்சி விபரங்கள் அறிவிக்கப் பட்டன. பல இடங்களிலும் அவரை அன்புடன் அழைத்துப் பெருமைப் படுத்தினர். அரசினரும் அன்பரைப் பாராட்டி அவருக்கு மேலும் *கமாண்டர் என்னும் உயர்பதவி யளித்தனர்.

இவ்வித அருமை பெருமைகளுடன் கமாண்டர் குக், தம் சொந்த நாட்டிலும் நிம்மதியாக நிலை

* Cape of Good Hope † Commander

இரண்டாம் பயணம்

கொண்டிருக்க முடியவில்லை. †தென் போலார் பிரதேசத்தில் பெரியதொரு கண்டம் நிலவுவதாகவும், ஆங்குச் செல்வ வளமும், பலவித வண்ணக் கற்களும், மாபெரும் மாணிக்கங்களும், ஆணிப் பொன் முதலிய உலோகங்களும் நிறைந்திருந்ததாகக் கூறப்பட்டது. பனி உறைந்து குளிர் மிளிர்ந்த அந்தப் பிரதேசத்திற்குச் செல்லுவது அரிதினும் அரிதானது என அறிவிக்கப்பட்டது. குக், இத்தகைய தென் கடலையும் கடந்து அந்நாட்டையும் காண விழைந்தனர். புதுமை காண்பதில் புத்திடம் கொண்ட கமாண்டர் குக், தாம் விரும்பியபடியே இப் பயணத்தையும் மேற்கொண்டார். சுமார் மூன்று ஆண்டுகள் இப் பிரயாணத்தில் ஈடுபட்டிருந்தார். வழியில் பல தீவுகளையும், புதுமைகளையும் கண்டாரேனும், தென் கடல் பகுதியைச் சுற்றிச் சுற்றி வந்தாரேனும், எவ்வித நிலப்பரப்பையும் காண்பது அரிதாயிற்று.

குளிர் மிகுந்த இக் கடற் பிரதேசத்தில் பல இடங்களில் தண்ணீர் உறைந்து பட்டும், மற்றும் பல விடங்களில் மாபெரும் பனிக் குன்றுகள் மிதந்து வந்தும் பிரயாணத்திற்கு இடைஞ்சல் இழைத்தன. பலவாறு முயன்றும் கமாண்டர் குக், நிலவி யிருப்பதாச் சொல்லும் நிலப் பரப்பை யடைய முடியவில்லை. மேற்கொண்டும் அவ்விடம் தமது பிரயாணத்தைத் தொடர்வதில் பயனில்லை எனக் கண்டு அவர் திரும்பவும் நமது நாட்டை யடைந்தார்.

இங்கிலாந்தில் பெரு வாணிபத்தில் ஈடுபட்ட பல வணிகர்கள் அயல் நாடுகளுடன் வியாபாரத்

---

† South Polar Regions

இந்தியக் கடற்பாதை

தொடர்பு கொண்டிருந்தனர். நம் பல் வளம் நிரம்பிய இந்திய நாட்டைக் குறுக்குப் பாதையாக அடைய ஏதேனும் புதிய கடற்பாதை காண முடியுமா எனச் சிந்தித்து வந்தனர். அவ்வாறு ஒரு பாதையைக் கண்டு அறிவிப்போருக்குப் பெரும் பொருள் பரிசளிப்பதாகவும் அறிவித்தனர். தமது இரண்டாவது பிரயாணத்தில் வெற்றி காணாததை யுன்னி இப் பயணத்தை மேற்கொண்டாகிலும் வெற்றிகொள்ள முடியுமா என ஆழ்ந்து ஆலோசித்து இம் முயற்சியில் ஈடுபடுவதென்றும் தீர்மானங் கொண்டார். இவர் கொண்ட தீர்மானத்தை யொட்டியே இவர் பிரயாணம் செய்யத் தேர்ந்தெடுத்த கப்பலுக்குத் *"தீர்மானம்" என்றே பெயரிட்டனர்.

கமாண்டரும் கடற்பாதையும்

1776-ம் ஆண்டு கமாண்டர் குக் மூன்றாம் முறையாக, †கிழக்கிந்தியத் தீவுகளின் வழியாக இந்தியாவுக்குப் பாதை காணும் பணியில் இணைந்தார். தாம் முன்பு சென்ற வழியே சென்று நியூ ஸீலாந்தை அடைந்தார். மற்றும் தாம் முன்பு தங்கியிருந்த கழகத் தீவுகள் முதலியவற்றில் தங்கித் தங்கிப் பயணத்தைத் தொடர்ந்து சென்று கொண்டேயிருந்தார். சிறு தெப்பங்களில் கடலில் அல்லாடிய பல கழகத் தீவு மக்களைத் தம் கலத்திலேற்றிக் காப்பாற்றினார். வானிகழ்ச்சியை ஆராய்ந்த டாஹிடி தீவிலும் தங்கினார். இங்கெல்லாம் எவ்வித நிகழ்ச்சியுமின்றிப் பிரயாணம் செய்து வந்தார்.

---

* Resolution † East Indies

டாஹிடி தீவினின்றும் பல தீவுகள் நிறைந்த தீவுக் கூட்டங்களையும் தாண்டிக்கொண்டு சென்றனர். பிரயாணத்தின் இப் பகுதியில் இக் குழுவினர் குளிர் மிகுதியால் அவதியுற்றனர்.

**மணற் தீவுகள்**

ஆங்கு வசித்து வந்த மக்களிடம் தம்மிடமிருந்த பல விநோதப் பொருள்களைப் பண்டமாற்றித் தமக்கு வேண்டிய கம்பளி, முரட்டுப் போர்வை முதலியன பெற்றார்கள். ஒருவாறு கடுங் குளிரையும் தாங்கிக்கொண்டு வடக்கு நோக்கியே பிரயாணம் செய்தனர். * ஆர்க்டிக் பெருங் கடலையும் அடைந்து சுற்றிச் சுற்றி வந்தனர். இந்தியாவுக்குச் செல்ல, கிழக்கு நோக்கிப் போகும்படி வசதியுள்ள கடற்பாதை ஏதும் தென்படுமோ என ஆராய்ந்தார். ஆங்குள்ள ஆழியின் பரப்பு அவ்வாறு செல்லுதற்கு அமையாததாக இருந்தது. பல பனிக்கட்டிகளும் மலையென மிதந்து வந்தன. மேற் செல்லுவதும் முடியாததாக அமைந்தது. ஆங்குத் தென்பட்ட ஒரு தீவுக் கூட்டத்தினுள் ஒன்றில் கலம் நிறுத்திக் கரை சேர்ந்தனர். இத் தீவு முழுவதும் மணற் பரப்பே நிரம்பியதாக இருந்தமையின் இதற்கு மணற் தீவுகள் எனப் பொருள்படும் † சாண்ட் விச் தீவுக் கூட்டம் எனப் பெயரிட்டனர்.

**தலைவரே தெய்வம்**

இந்த மணற் தீவில் வாழ்ந்து வந்த மக்கள் நாகரிகமற்றவர்கள்; மூடப் பழக்கங்களில் நம்பிக்கை கொண்டவர்கள்; இதுவரை எந்த அந்நியரையும் ஆங்கிலேயரையும் பார்த்தறியாதவர்கள். இக் குழுவினர் அங்கு வந்தடையவும், அதனைக் கண்ட அந்நாட்டு மக்கள் அவர்களது தோற்றத்

---

* Arctic ocean † Sandwich Islands

தையும், முகப் பொலிவையும், அவர்கள் செலுத்தி வந்த கலத்தையும், அதில் நிறைந்திருந்த பல விநோதப் பொருள்களையும் கண்டு திடுக்கிட்டு அதிசயமுற்றனர். தமது குல விளக்காகிய தெய்வமே மாற்றுருவில் வந்து காட்சியளிப்பதாக நினைத்தனர். கமாண்டர் குக்கை, கடவுளென்றும் அவரது குழுக்களைச் சுற்றுத் தேவதைகளென்றும் கொண்டனர். அவர்கள் முன்னிலையில் தெய்வ பக்தியோடு கை கட்டி, வாய் புதைந்து வந்தனை வழிபாடுகள் செலுத்தினர். ஊனளித்து உண்ண வேண்டினர்; உணவு பல படைத்து ஒதுங்கி நின்றனர். இம் மூடச் செயல்களைப் பார்த்துக் குழுவினர் இவர்களது மடமையையும் ஆழ்ந்த நம்பிக்கையையும் கண்டு வியந்து நின்றனர்.

பேரறிஞரும் பெரும் புயலும்

தெய்வமெனப் போற்றப்பட்ட கமாண்டர் குக், தமது 'தீர்மானக் கப்பலில்' திரும்பவும் பிரயாணம் புறப்பட்டார். சில நாட் பயணம் சென்ற பின்னர் இவர்கள் ஒரு பெரும் புயலுடன் போராட வேண்டியதாயிற்று. பாய் மரத்தூண் முறிவுற்றது. தீர்மானக் கலம் கொந்தளிக்கும் கடலில் தத்தளிக்கத் தொடங்கியது. திறமைபெற்ற மீகாமர்களும், ஒப்பற்ற தலைவருமாகிய கமாண்டர் குக்கும் செய்வதறியாது பலவாறு முயன்று, முயற்சி குன்றாது, உயிரைப் பணயமாக வைத்துக் கலத்தை வந்த வழியே திருப்பிச் செலுத்தி, முன் தங்கிய மணற் தீவிற்கே வந்து சேர்ந்தனர்.

தெய்வமும் தேவதைகளும் கடும் புயலுக்கு ஆற்றாது திரும்பி வந்து கொண்டிருப்பதை அத்தீவு மக்கள் கண்டனர். தெய்வம் புயலுக்கும், மழைக்கும், இடி மின்னலுக்கும் பயந்தொளியுமா?

தெய்வத்தின் முன் அவற்றின் ஆற்றல் எம்மாத்திரம்? இவர்களால் புயலை எதிர்த்து நிற்க இயல வில்லையே? ஒருக்கால் இவர்களும் நம்மைப் போன்ற மனிதப் பிறவிகள்தாமோ?' என ஐயுற்றுக் கூடிக் கூடிப் பேசினர். 'கடும் புயலுக்குக் கரந்துறையும் இவர்களைத் தெய்வமென்று கொண்டாடினோமே? என்னே நமது அறியாமை!' எனத் தம்மைத் தாமே நொந்து கொண்டனர். முன்னர் தெய்வம் எனக் கொண்டாடிய இவர்களே இப்பொழுது மாறுபட்ட எண்ணம் கொண்டனர். ஆண்டடைந்த ஆங்கிலேயரை ஏறெடுத்தும் பார்க்க வில்லை. முன்னம் புரிந்த அறச் செயல்களை மறந்து மறச் செயல் புரியத் தலைப்பட்டனர். பலரும் கூட்ட மாகக் கூடினர்; குழுவினரிடம் கொண்டிருந்த மரியாதைகளை மறந்தனர்; அவர்களைத் தாக்கத் தொடங்கிவிட்டனர்.

மக்களின் மாறுபாடு

மாறுபட்டு விளங்கும் இம் முரட்டு மக்கள் கப்பலையடைந்து கொள்ளையிடத் தொடங்கினர். பல பொருள்களைப் பறித்தனர். தீச்செயல் புரியத் தலைப்பட்ட இவர்களிடையே கமாண்டர் குக் செய்வதறியாது திகைத்தார். படகொன்றில் பல வீரருடன் கரையோரமாகச் சென்று அத் தீவின் தலைவனைக் காண விரைந்து சென்றார். முன்பு மாலையிட்டு மண்டியிட்டு வணங்கிய அத் தலைவன் இப்பொழுது இவரை மதிக்கவுமில்லை. குக், 'அத் தலைவனைத் தன் கலத்திற்கு வருமாறு வருந்தி யழைத்தார். இவர்பால் ஐயுற்ற தலைவன் ஆங்கு வர மறுத்துவிட்டான். இக் குழுவினர்பால் வெறுப் புற்ற அம் முரட்டு மக்கள் இவர்களை எதிர்த்துத் தாக்க ஆரம்பித்தனர். குழுவினர் தற்காத்துக்

தீவினர் தீச் செயல்

கொள்ளச் சுட்டுத்தள்ள வேண்டியதாயிற்று. ஆனாலும் அம் மக்கள் அணிந்திருந்த உறுதியான கவசம், துப்பாக்கிக் குண்டையும் ஏற்பதாயில்லை. தம்மை நோக்கிச் சுடுவதைக் கண்டதும் அவர்கள் முன்னிலும் வெகுண்டார்கள்.

முரடர்களின் சினத் தீ மூண்டெறிவதைக் கண்ணுற்ற குக், சுடுவதை நிறுத்திச் சமாதான முறையைக் கைக்கொள்ள எத்தனித்தார். ஆனால் அவ் வேண்டுகோள் எவ்விதப் பயனையும் அளிக்கவில்லை. ஈட்டிகளும், வேல்களும் பாய்ந்து பலர் உயிரிழந்தனர். சிறந்த போர்த்தலைவரும், எதற்கும் அஞ்சா நெஞ்சு படைத்தவருமான கமாண்டர் குக் பெருமகனார் இவர்கள் எதிர்ப்புக்குத் தாங்காது சரண் புகுவார் போன்று கை தூக்கி நின்றார். கூற்றுவன் வேலுருக் கொண்டனன் போலும். அக் கூரிய வேல் ஒரு முரடனின் கையினின்றும் வெளிப்பட்டது. அது அம் மாபெரும் வீரர், ஒப்பற்ற தலைவர், ஆராய்ச்சியாளர், கமாண்டர் குக் உடைய ஆவியைக் கவர்ந்து சென்றது. பலராலும் போற்றப்பட்டுச் சிறந்து விளங்கிய கமாண்டரின், உயிரிழந்த உடலம், வேரற்ற மரமெனக் கீழே சாய்ந்தது.

குழுவினரின் தலைவராய கமாண்டர் குக் இறந்து ஒழிந்ததைக் கண்ணுற்ற முரட்டு மக்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள். அளவிடற்கரிய ஆற்றல் வாய்ந்ததோர் ஆராய்ச்சியாளருக்கு இழைத்த தீங்கை அவர்கள் உணரவில்லை. அவர்கள் இழைத்த தீங்கினால் அவர்கள் அடைந்த பெருமை ஏதும் உளதோ? அவரை வென்று விட்டோம் எனக் களி கூர்ந்து அம் மக்கள் தமது உறைவிடம் சென்றனர்.

---

## 3. இருள் கவிந்த கண்டம்

பதினெட்டாம் நூற்றாண்டில் ஆப்பிரிக்கா வைப் பற்றியும், அதன் உள் நாட்டைப்பற்றியும் எவரும் எதுவும், அறிந்திலர். ஆதலின் அதனை இருட்டுக் கண்டம் என்றும் இருண்ட ஆப்பிரிக்கா என்றும் குறித்தனர். அந்தக் கண்டம் இருண்ட தன்று. அதனைப்பற்றிய விவரங்கள் ஏதும் வெளிப் படாததால் அதை இருள் சூழ்ந்திருந்தது எனக் குறிப்பிட்டனர்.

புது நாடு காணவேண்டுமென்ற ஆவலும், பல நாட்டவருடனும் வாணிபத் தொடர்பு கொள்ள வேண்டும் என்ற அவாவும் ஐரோப்பிய நாடுகள் எங்கணுமே பரவி யிருந்தன. இதற்கென ஒரு கழகமே நிறுவப்பெற்றிருந்தது. அயல் நாடுகளி லும், புது நாடுகளிலும், எவருமே போயறியாத வள மிக்க இடங்களிலும், நிலவியுள்ள விவரங்களை அறி வுறுத்துவதே அதன் முக்கியப் பணியாகும். மேலும் அவ்விடங்களுக்குத் தக்க அறிஞர்களை அனுப்புவித்துத் தாம்கொண்டுள்ள பணிக்கான அபிவிருத்திகளை அச் சங்கம் செய்துகொண்டு வந்தது. இருண்ட ஆப்பிரிக்காவைப் பற்றிய விவரங் காணவும் இச் சங்கம் முயற்சித்தது; ஆயினும் அதில் வெற்றி பெறவில்லை. அக் கழகத் திற்கு வெற்றித் திருவை அளித்து இருளிற் கிடந்த விவரங்களை ஒளியிற் கொணர்ந்த பெருமை‡மங்கோ பார்க் என்பவரையே சாரும்.

மங்கோ பார்க், * ஸ்காத்லாந்தைச் சேர்ந்த பெரியார். †செல்கர்க் என்னும் நகராருகேயுள்ள ஒரு

---

‡ Mungo Park   * Scotland   † Selkirk

மங்கோ பார்க்

கிராமத்தில் 1771-ம் ஆண்டின் பிற்பகுதியில் பிறந்தவர். அவர் இளமையிலேயே வைத்தியத் துறையில் இலங்கவேண்டும் என்ற அவாவை மேற்கொண்டவராவர். பதினைந்து ஆண்டுகள் நிரம்பிய வாலிபராக இருக்கும்போதே செல்கர்க் நகரில் சிறந்து விளங்கிய ஒரு வைத்திய நிபுணரிடம் அடைக்கலம் புகுந்தார். மேலும் *எடின்பரோ சர்வகலாசாலையில் நடைபெறும் பல்வேறாய பேருரைகளுக்கும் தவறாது செல்வார். இயற்கைப் பொருள் ஆராய்ச்சிக்காக ஆராய்ச்சிக் கூடங்களுள்ள பற்பல இடங்களுக்கும் சென்றுவந்தார். இங்ஙனம் அவர் கலை வளர்ச்சி பெற்றார். வைத்தியத் துறையிலும், இயற்கைப் பொருள்களை ஆராய்வதிலும் சிறந்த அறிஞராகக் கருதப்பட்டார்.

பணி மேற்கோளல்

இப் பேரறிஞர், ஒரே இடத்திலிருந்து மருத்துவத் தொழில் புரிவது, இவரது மனோசக்திக்கு உகந்ததாக இல்லை. இவர் மனம் இயற்கை பொருள் ஆராய்ச்சியிலும் பல நாடுகளின் வரலாறுகளிலும் விழைந்து நின்றது. பற்பல இடங்களையும் காண வேண்டும் என்ற அவா மிக்கவர் ஆனார். இதற்குத் துணைபுரியவே நேர்ந்தது போலச் சுமத்திராத் தீவை நோக்கிச் செல்லும் ஒரு கப்பலின் உதவி வைத்தியர் பணியை மேற்கொள்ளுமாறு இவருக்கு வேண்டுகோள் கிடைத்தது. தமது நோக்கம் ஈடேற அதுவே தக்க சந்தர்ப்பம் என்று பார்க் அப்பணியை ஏற்றுக்கொண்டார். இப்பணியையும் அவர் தொடர்ந்து செய்தாரில்லை. ஒரு சில ஆண்டுகளே இவர் அத்தொழிலிலிருந்தார்.

---

* Edinburgh

அது சமயம்தான் புதிது கண்டு அறிவிக்கும் சங்கம் ஆப்பிரிக்காவிற்குத் தக்கார் ஒருவரை யனுப்ப ஆலோசித்து வந்தது. இதனையறிந்த பார்க், இப் பணியில் ஈடுபட விரும்பினார். தம் விருப்பத்தைத் தாமே சங்கத்தாருக்கு அறிவித்துக்கொண்டார். இவரது தகுதிகளையும், உரத்தினையும், ஊக்கத்தினையும் நன்குணர்ந்த கழகத்தார் இவரது விருப்பைப் பெருமகிழ்வுடன் ஏற்றுக்கொண்டனர். இவரையே தலைமை வகிக்கச் செய்து இருண்ட ஆப்பிரிக்காவில் உள்நாட்டில் பிரயாணம் செய்து *நைஜர் என்னும் ஆற்றின் போக்கை ஆராயவும், ஆங்குள்ளாரிடம் தொடர்பு கொண்டு வாணிபம் நடத்த ஆந்த இடங்கள் தகுதியாக உள்ளனவா என்று உளவு காணவும், திட்டம் செய்தனர். மங்கோ பார்க்கும் இவ் அரும் பணியைப் பணிவுடன் பற்றிக்கொண்டார்.

**பார்க்கின் பிரயாணம்**

புதுமை காணும் பணியில் புதிதாய் இறங்கிய மங்கோ பார்க் 1795-ம் ஆண்டு தமது பிரயாணத்தைத் தொடங்கினார். இங்கிலாந்திலிருந்து புறப்பட்டுப் பறந்த பரவையில் ஒரு மாத காலம் பிரயாணம் செய்து மேற்கு ஆப்பிரிக்காவை யடைந்தார். †காம்பியா என்னும் பேராறு கடலில் கலக்குமிடத்தில் தம் கலம் நிறுத்திக் கரை சேர்ந்தார். உள்நாடு செல்ல அந் நதியே தக்க சாதனமா யிருப்பதறிந்து அதனூடேயே சுமார் இருநூற்றுக்கு மேலான மைல்கள் தூரம் சென்று ‡பைசானியா என்னுமொரு பெரிய நகரினை அடைந்தார்.

---

* Niger † Gambia ‡ Pisania

மங்கோ பார்க் ஆங்கு பைசானியாவில் †டாக்டர் லெய்ட்லி என்னும் பெருந்தகையாளரை யடைந்து அவரது விருந்தினராகத் தங்கியிருந்தார். இவரது உடல் நிலையும் கேடுற்றிருந்தது. நோய் குணமடைந்த பின், தாம் மேற்கொண்ட பணியில் ஈடுபட்டு முன்னேறுவதற்கான முயற்சிகளைச் செய்யலாயினர். உள்நாட்டில் வழங்கும் மக்களின் மொழியையும், பற்பல இடங்களுக்குச் செல்லும் மார்க்கங்களையும் லெய்ட்லி வாயிலாகவும், மற்றும் பல வணிகர் வாயிலாகவும் பிழையற உணர்ந்து கொண்டார். *மென்டிங்கோ மக்கள் பேசும் பாஷையில் தேர்ச்சி கொண்டார்.

பார்க்கின் குழுவினர்

மாரிக்காலமும் ஓய்ந்தது. பார்க், உள்நாடு செல்ல ஆயத்தமானார். லெய்ட்லியின் உதவியால் இவரை இரு நீக்ரோக்கள் துணை கொள்வாராயினர். ஜான்ஸன், டெம்பா என்பன இவர்கட்குப் பெயர். முன்னவன் சில காலம் இங்கிலாந்தில் வசித்திருந்தமையால் அவ்வுள்நாட்டுப் பாஷை தவிர ஆங்கிலமும் நன்கு அறிந்தவன். பின்னவன் ஆங்கு வழங்கும் மொழிகள் யாவற்றிலும் தேர்ச்சி பெற்றவன். இவ்விருவரும் சிறந்த உண்மையான ஊழியர்க்குரிய இலக்கணம் பொருந்தியவர்கள். உள்நாட்டுப் பயணத்திற்கு இவர்களது துணை பேருதவியாயிற்று. அடிமை வாணிபத்தில் ஈடுபட்ட ஒரு வணிகரும், உள்நாடு செல்லும் ஒரு நீக்ரோவும், மற்றும் சிலரும் இவர்களுடன் கூடவே பிரயாணம் செய்ய முற்பட்டனர். எழுவர் கொண்டதே இவரது குழு ஆயிற்று. பார்க் ஒரு குதிரையிலும், ஊழியத் துணைவர்கள் இரு மட்டக் குதிரைகளிலும் பயணம்

† Dr. Laidley * Mandingo

புறப்பட்டார்கள். மாற்றுடைகளும் துப்பாக்கி
களும், மற்றும் இதர சாதனங்களும் சுமந்து சென்ற
னர். திசையறிகருவியும், வெயில் மழைக்குதவ ஒரு
குடையும் கொண்டு சென்றார்.

இவ்வாறு தக்க குழுவினருடன் பயணப்பட்ட
மங்கோ பார்க்குடன் டாக்டர் லெய்ட்லி பெருமக
னும் மற்றும் சில ஆங்கிலரும் சற்றுத் தூரம் கூட
வந்து இவர்களை வழியனுப்பினர்.
வழி யனுப்பல் வெற்றித் திருவை வேண்டினர்.
புதுமைகாணச் செல்லும் பார்க்
வெற்றி பெற்றுத் திரும்ப இறைவனை வேண்டினர்.
பற்பல பேராபத்துக்கள் நிறைந்த உள்காட்டில்
பிரயாணம் செய்து அவற்றிற்காளாகாமல் வெற்றி
யுடன் திரும்ப வேண்டும் என்று மனமாற விழைந்
தனர்.

இக்குழுவினர் சின்னாட்களில் *மதினா என்னும்
ஊரை அண்மினர். இவ்வூர் தக்க பாதுகாவலுடன்
அமைந்துள்ள ஒரு சிற்றூர் ஆகும்; மதினா என்
னும் ராஜ்யத்தின் தலையிடமாகும். ஆங்குச் சிறப்
புடன் வசித்து வந்த அதன் தலைவனாகிய அரச
னைக் கண்டனர். அவ்வரசன் குழுவினரைத் தக்க
மரியாதையோடு வரவேற்று ஊண், உறையுள் முத
லியவற்றை அன்புடன் அளித்தான். தன் பிரதே
சத்திலுள்ள இடங்களில் தாராளமாய் விருப்பப்படி
பிரயாணம் செய்ய அனுமதி அளித்தான். இவருக்
குத் துணையாக ஒரு வழிகாட்டியையும் அனுப்புவித்
தான்

மேற்கு ஆப்பிரிக்க மக்கள் சிற்சில மூடக்
கொள்கைகளில் நம்பிக்கையுள்ளவர்களாவர். இத

---

* Madina

லேப் பார்க் தாம் சென்ற இடமெங்கும் கண்டு கொண்டார். மந்திரங்களிலும் மந்திரக் கவசங்களிலும் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர்கள். இவ்விதக் கவசங்கள் தங்களுக்குத் தக்க பாதுகாப்பாகும் எனவும் நம்புவர். தாம் மேற்கொள்ளும் பணிகளில் வெற்றிபெற அவை உதவும் என உறுதி கொள்வர். காட்டுத் தேவதைகளிடம் பயபக்தி நிறைந்தவர்கள். இக் குழுவினர் நேரிற் கண்ட ஒரு காட்சியே இதனை மெய்ப்பித்தது. ஒரு பெருமரத்தில் பல வண்ணமாய ஆடைகள் பறந்து கொண்டிருந்தன. இவ் ஆடைகள் ஆங்கு உறைந்து வரும் ஜம்போ தேவதையின் உடுப்புக்கள் என்று கொண்டனர். மனைவியர் கணவருடன் முரண்பட்டால் இந்த தேவதை அந்தப் பெண்களைத் தக்கபடி தண்டிக்கும் என்று அச்சம் கொண்டனர். உண்மையில் தேவதை தண்டிப்பது இல்லை; தேவதையின் பெயரால் இவர்களில் ஒருவரே அந்த ஆடைகளை மேற்போர்த்துக்கொண்டு, யாவர் முன்னிலையிலும் அப்பெண்களை அடித்து இடித்து அல்லலிழைப்பர். பார்க்கும் துணைவர்களும் இவ்வாறான அதிசயக் காட்சிகளையும் விநோதங்களையும் கண்டு சென்றனர்.

*மூட நம்பிக்கை*

ஜம்போவின் ஆடைகளைக் கண்ணுற்ற பின்னர், இரு தினங்களில் வேற்றூரை அடைந்தனர் இக் குழுவினோர். இந்த இடத்தில் இவர்கள் பருகுதற்கு நீர் கிடைப்பதே அரிதாயிற்று. மிகவும் வரண்ட பிரதேசம். அனைவரும் தாகம் மேலிடத் தண்ணீரில்லாமல் வருந்தினர். வழியே ஒரு விநோதமான மரம் தென்பட்டது. எட்டப் பார்வைக்கு அது பல நிறமான இலைகளைக் கொண்ட மரம்போல் தோற்றமளித்தது.

*நீரறிவிப்பு*

இவ்வித நிறமுள்ள இலைகளையுடைய மரமும் உளதோ! என்று அனைவரும் அதிசயப் பட்டனர். ஆனால் அதனை அண்மியபோது அவை யனைத்தும் ஆடைகளே அன்றி இலைகள் அல்ல எனத் தெளிந்தனர். அதன் அருகாமையி லேயே தூய குடி நீர் உள்ள ஒரு சிறு நீர்நிலை காணப்பட்டது. நீர்நிலை யிருக்குமிடத்தை அறி விக்கும் அறிவிப்புபோலும் அம் மரம்! நீர் குடிக்க அனுமதி பெறுவான்போல் அம் மரத்திற்கு அளிக் கப்பட்ட காணிக்கைகள்போலும் அவ் ஆடைகள்!

சிலநாட் பிரயாணத்திற்குப் பிறகு *போண்டோ என்னும் தொகுதியின் தலைநகரை யடைந்தனர். ஆங்குள்ள ஒருபெரு வணிகர் இவர்களது நட்பினர் ஆனார். அப் பிரதேசத்தின் தலைவன் பார்க் தம்முடன் கொண்டுசென்ற குடை விரும்பிய வரைக் கண்டு அளவளாவினர். விலையுயர்ந்த பல மணிகளையும், வாசனைத் திரவியங்களையும், புகையிலையையும் காணிக்கையாக அரசனுக்கு அளித்தார். அரசன் இவைகளைக் கொண்டும் திருப்தி யடைந்தானில்லை. பார்க்கிடமிருந்த சில பொருள்களே அவனது நாட் டத்தைக் கவர்ந்தன. அவர் வைத்திருந்த குடையும் அவர் அணிந்திருந்த வனப்புமிக்க மேற் சட்டை யுமே அவன் மனத்தைக் கொள்ளை கொண்டன. அரசர்களுக்கு வெண் கொற்றக் குடைகள் உண்டு என்று கூறும் கவிநயம் போன்றல்லாமல் கருப்புக் குடையை இவன் விரும்பினான் போலும்!

குடையைக் கொடையாக அளிப்பதில் பார்க் வருந்தவில்லை; ஆயினும் தான் பெரிதும் விரும்பிய தமது மேற்சட்டையை விடுவதற்கு அவர் மனம்

---

*Bondou

கொள்ளவில்லை. இருப்பினும் அந்தத் தலைவன் கேட்டதைக் கொடுக்காவிட்டால் தமக்கு ஏதேனும் தீது நேரக்கூடும் என உணர்ந்து, அரசனுக்கு அவற்றை அன்பளிப்பாக அளித்தனர். பொன்னும் மணியும், சீரும் சிறப்பும் உடைய அத் தலைவன் குடையின்மேற் கொண்ட கருத்து வியக்கத் தக்கதே. அன்பளிப்புக்களை யேற்றுக் கொண்ட அரசன் மனமகிழ்ந்து, பார்க்குக்குப் பரிசாக ஏராளமான பொற் கட்டிகளையும், மற்றும் தன் வசமுள்ள விலையுயர்ந்த அணிகளிற் சிலவற்றையும் கொடுத்தான். பல நாட்களுக்குப் போதிய உணவுப் பண்டங்களையும் அளித்தான். அரசனும் அன்புடன் வழியனுப்ப, பார்க்கும் அவரது குழுவினரும் தம் பயணத்தைத் தொடங்கினர்.

மங்கோ பார்க் மேற்கொண்டு சென்ற இடங்களில் உள்நாட்டு மக்களின் தொந்திரவு மிகுந்திருந்தது. அவர்களை யெதிர்த்துச் செல்லவும் இவரால் இயலவில்லை. அவர்கள் கண்ணுக்குத் தெரியாமல், பயணத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டுவதாயிற்று. ஆனதால் பகற்பொழுதில் வெளிப்படாது இரவு நேரங்களிலேயே பிரயாணம் செய்தனர். பகற்பொழுதிலேயே பயங்கரமான கொடு விலங்குகள் தென்பட்டுத் துன்பம் விளைக்கும்போது, நிலவில் நிலவி யிருக்கும் கொடுமை சொல்லத்தரமோ! ஒருபுறம் புலி யொன்று உறுமும்; மறுபுறம் சிறுத்தை கதறும். ஒரு சமயம் கரடி குறட்டை விடும்; மறு சமயம் கோட்டான் பெருங் கீச்சிடும். மனத்தால் நினைத்தாலும் பயம் தோன்றுமே! இவ்விதக் கொடு விலங்குகள் நிறைந்துள்ள, கானகங்களுள்ளும் தைரியமாக வழி நடந்தனர் குழுவினர். முன் வைத்த காலைப் பின் வைக்கலாகாது என்பது

பயங்கரப் பிரயாணம்

அவர்களது எண்ணம். பல இடுக்கண்கட்கு இடைப் பட்டும் யாதொன்றுக்கும் அஞ்சாது பகலென்றும் இரவென்றும் பாராது வழி நடந்தனர் குழுவினர். என்னே இவர்களது தீரமும், உள்ள உரமும், ஊன்றிய ஊக்கமும்!

இப் பயங்கரங்களினூடே பல மைல்கள் தூரம் வழி நடந்து * செனிகால் ஆற்றின் கரையை யடைந் தனர். இவ்வாற்றுக்கு மறு கரையிலிருந்து மற் றொரு தலைவனுக்குச் சொந்தமான பிரதேசம் தொடங்குகின்றது. அறுவகை அரண்களுள் ஆற் றரணும் ஒன்றல்லவா? இந்த செனிகால் ஆறு தான் அந் நாட்டிற்குற்ற எல்லையாகும். இவ் வெல் லையில் பிரவேசிக்க அந்நாட்டு மன்னனின் அனு மதி பெற வேண்டும்; அதன் பொருட்டு பெருந் தொகை அளிக்க வேண்டும். கருமமே கண்ணாய் நின்று புதுமை காணும் திடம் கொண்ட பார்க்கும் அதற்குச் செலுத்த வேண்டிய பொருளை யளித்து அனுமதி பெற்று ஆற்றைக் கடந்து அந்நாடு புகுந் தனர். இவ்வாறு தொகையைக் கட்டியதில், முன் தான் பெற்று வந்த பரிசுப் பொருள் அனைத்தும் கறைந்து போயின.

எவ்வித விசேஷ நிகழ்ச்சியுமின்றி அந்நாட் டைக் கடந்து, † காசன் என்னும் நாட்டை யடைந் தனர். அந்நாட்டு அரசன் மங்கோ பார்க்கின் குழுவினரை அன்புடன் வரவேற்றான். விருந் தினர்க்கு வேண்டிய வசதிகளை யளித்தனன். இந் நாட்டிலுள்ள ஒரு சிற்றூருக்குத்தான் இவர் களுடன் தொடர்ந்து வந்த நீக்ரோ வந்து கொண் டிருந்தான். அவனுடன் குழுவினரும் சென்று

* Senegal † Kasson

அவன் வீடடைந்தனர். தனது இருமுதுகுரவரைக் காணவும் அவன் கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லை யில்லை.

தமது மகன் திரும்ப மீளான் என்றே இது வரை நினைத்து, அவனை நினைந்து நினைந்துருகி யிருந்த வயது முதிர்ந்த அப் பெற்றோர்க்குத் தம் மகனை உயிருடன் நேரிற் காணவும் தம் முதுமை மையைக் கூட மறந்தனர். "கன்றினைப் பிரிந்திருந்த கரா போன்று" ஓடோடியும் வந்து அணைந்து கொண்டனர். பிரிந்தவர் கூடினல் பேசவும் வேண்டுமோ? கண்ணொளி யிழந்திருந்த தாயும் தன் சேயைத் தழுவலும், தான் இழந்த கண்களைத் திரும்பப் பெற்றது போல் மகிழ்ந்து, மகனைத் தன்னிரு கரங்களாலும் தடவிக் கொடுத்து மகிழ்ந்தாள். இம் மகிழ்ச்சிதரும் நிகழ்ச் சியைக் கண்ணுற்று அவர்களிடம் குழுவினர் விடை பெற்றுப் பிரிந்து சென்றனர்.

காசன் நாட்டரசன் தமக்கு உவந்தளித்த உதவிப் படையுடன் மாங்கோ பார்க் பிரயாணப் பட்டார். சில தினங்களில் *கார்ட்டா நாட்டின் தலை நகரைக் கிட்டினர். நகரின் புறத்தே தங்கித் தமது வருகையை அரசர் பெருமானுக்கு அறிவித்து அனுமதி வேண்டி நின்றனர்; அனுமதியும் கிட்டியது. குழுவினர்க்கு உண்டியுதவினர். ஒரு குடிசையை ஆயத்தம் செய்து உறையுள் வழங்கி னர். இந்த அந்நிய நாட்டவரைக் காண நகர மாந்தர் பலர் பெருங் கூட்டமிட்டனர். கருந்தோல் உறிக்கப்பட்ட வெண் மேனியர் எனக் கூத்தாடி னர். இதற்குமுன் இவர்கள் எந்த ஐரோப்பியரை

கருமேனியர் களிப்பு

* Kaarta

யும் கண்டிலர். ஆனதாலேயே பார்க்கினது
தோற்றம் அவர்களுக்குப் பெரு வியப்பளித்தது.
திரள் திரளாக வந்து தரிசித்தனர்.

மன்னர் பிரான் தமது விருந்தினரை
அழைத்துவரச்செய்து தக்க மரியாதையுடன் வர
வேற்றான். பல நேரம் அன்புடன் அளவளாவி
இன்னுரையாடினார். பார்க்கின், உள்
அரசனின் நாடு செல்லும் கருத்தறிந்து அம்மன்ன
அறிவுரை வன் கவலை கொண்டான். பார்க் இனி
மேற்கொள்ளும் வழிப்பாதை இன்னும்
இடுக்கண்கள் நிறைந்தது என்று அறிவித்தான்.
தமக்கும் தமதடுத்த *பம்பாரா நாட்டிற்கும் நேசப்
பான்மை குறைந்துள்ள தென்றும், தம் நாட்ட
வரை இம்சிப்பதில் அவர்கள் இனிமை கொள்ளு
கின்றனர் என்றும், எந்த நேரத்திலும் அவர்களுள்
போர் மூளலாம் என்றும், நிலவும் நிலையை உள்ள
வாறு உணர்த்தினான். இவ்வாறாய நிலைகள் நேர்நிற்
கும் பொழுது அவர் உள்நாடு செல்லுதல் அறி
வுடைமையன்று என்று அறிவுறுத்தினான். தமது
எண்ணத்தைக் கைவிடுமாறும், எத்துணை வருட
மேனும் தன் நாட்டிலே இருக்கலாமெனவும் நன்
மொழியால் நவின்றான். இவ்வளவு தூரம் வந்தும்
இனியும் மேற்செல்லாமற் திரும்பவோ அவ்விடமே
இருக்கவோ பார்க் விரும்பவில்லை. தீங்குகளுக்குப்
பயப்பட்டு ஓரிடத்தில் தங்கும் மனப்பான்மை
கொண்டவராயின் தமது சொந்த நாட்டிலேயே சுக
மாக இருந்திருப்பாரன்றோ? இவ்வளவு இடுக்கண்
களுக்கு ஆளாவானேன்?

மன்னவனின் மதிமொழியை மனத்திலிறுத்தி
மங்கோ பார்க் பகை மிகுத்த பம்பாரா நாட்டின்

* Bambara

வழியே செல்லாது வேறு பாதை மூலம் முன்னேற முயற்சித்தார். அருகிருந்த * லூடாமர் நாட்டைக் கடந்து செல்வதாய்த் திடங்கொண்டார். அந் நாட்டில் எதிர்ப்பின்றிப் பிரயாணம் செய்ய மன்னனிடம் அனுமதி கோரினார். சில நாட்கள் சென்ற பிறகே அரசனிடமிருந்து வீரர்கள் வந்துற்றனர். அண்மையி லுள்ளதோர் நகரில் தங்கியிருக்கும் அரசர்பால் அழைத்தேகுவதாக அறிவித்தனர். அவர்களது தோற்றத்தையும் அவர்களது நடத்தைகளையும் கண்ணுற்ற பார்க், அவர்களிடம் சிறிது ஐயம் கொண்டார். அவர்களைத் தொடர்ந்து செல்ல எண்ணங் கொண்டாரில்லை. ஆயினும் அவர்கள், இவராக வராவிடினும் வற்புறுத்தி இழுத்துச் செல்லுவர் எனவும் தோற்றியது. நடப்பது நடக்கட்டும் எனத் துணிந்து அவர்களுடன் புறப்பட்டார். தம்முடன் தமது அடிமைத் துணைவன் டெம்பாவை மட்டும் அழைத்துச் சென்றார்.

சிறைப்படல்

அண்மையிலுள்ளது என அறிவுறுத்தப் பட்ட இடம் இவர்களை வெகுதூரம் இழுத்துச் சென்றது. கடைசியாக அத்தலைவனது உறைவிடம் அடைந்தனர். அசுத்தம் நிறைந்தும், ஒழுங்கற்றும் இருந்தது அவர்கள் உறையுள். உறையுளின் தோற்றமே அதில் வாழ் மக்கள் எப்படியிருப்பர் என்பதைத் தெற்றென விளக்கும்! அந்த இடம் எப்படி ஒழுங்கற்று இருந்ததோ அதே போன்று ஒழுங்கற்ற நடத்தை கொண்டவராவர் ஆங்குள்ளோர். தலைவன் ஆங்கு கம்பீரமாக அமர்ந்திருந்தான்; அவன் பார்க்கை நன்கு வரவேற்கவில்லை. ஆனாலும் சிறிது உரையாடத் தொடங்கினான். பார்க் பேசும் ஆங்கிலம்

---

* Ludamar

அத்தலைவனுக்குப் புரியாது; தலைவன் பேசும் அராபிய பாஷை பார்க்குக்குப் புரியாது. இந் நிலையில் இருவரும் உரையாடுவது யாங்ஙனம்?

தலைவனது பார்வையில் ஐயமும், செருக்கும், வெறுப்பும், கொடுமையும் நிறைந்திருந்தன. பார்க் அவ்விடம் வந்திருப்பதை அத் தலைவன் விரும்பவில்லை போலும்! ஏதும் உளவு காண வந்துள்ள ஒற்றரோ என ஐயுற்றான்; தன் தலைமையையும் அதிகாரத்தையும் எண்ணிச் செருக்குற்றான்; பார்க், மூர் வமிசத்தைச் சார்ந்த இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவராயின்றி, கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவராய் இருப்பது கண்டு வெறுப்புற்றான். அவர் ஆங்கு வந்ததை விரும்பாததால் கொடுமைபுரியத் தலைப்பட்டான். மங்கோ பார்க்கை ஒரு தனி விடுதியான குடிலில் இருக்கச் செய்தான். அவர் கொண்டு சென்ற பொருள் அனைத்தையும் பறித்துக் கொண்டான். ஊணும் நீரும் சரியாக அளிக்காது துன்புறுத்தினான். தலைவன் இவருக்கு இழைத்த கொடுமைகளும், அளித்த அவமரியாதையும் சொல்லத்தரமன்று. மனத்திடம் கொண்ட மங்கோ பார்க் இவை யொன்றையும் பொருட்படுத்தவில்லை. இவரது வரலாறு

> மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
> எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
> அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
> கருமமே கண்ணா யினார்.

என்பது நன்கு புலப்படுகிறது.

ஆங்கவர் அடைபட்டிருந்த காலத்தே பல கஷ்டங்களும் அநுபவிக்க நேர்ந்தது. அந் நாடு பாலைநிலம் சார்ந்த இடமாதலின் காற்று அனலெனத் தீய்த்துக் கொண்டிருந்தது. தாகம் தணிக்க நீர் கிடைப்பதே அரிதாயிருந்த அந்த இடத்தில் வெப்பம்

நீர்வேட்கை

தணிக்கவா நீர் கிடைக்கப் போகிறது? சிறைப்பட்டிருந்த அவர்க்குக் குடிநீர் சிறிதளவே கிடைத்தது; அதுவும் அவர் நீர் வேட்கையைத் தணிப்பதற்குப் போதாததாக வமைந்தது. கிட்ட இருக்கும் கிணறுகளிலும் தண்ணீர் கொள்வது கடிதாயிற்று. இவருக்காகத் நீர் எடுப்பதைக் கண்ணுறும் எவரும் அதை அனுமதிப்பதாயில்லை. மனமிரங்கி அவருக்கு நீர் வார்ப்பார் எவருமிலர். அவர்கள் கொண்டுள்ள மதவெறியே இதற்கு உற்ற காரணமாகும். ஆடு மாடுகளுக்குக் கிடைக்கும் நீர்கூட இவர்க்குக் கிடைப்பது அரிதாயிற்றெனில் அவருற்ற அல்லல்களை எவ்வாறுரைப்பது?

நல்லோர்க்கு நன்மையே கிட்டும். பார்க் எவர்க்கும் எத் தீமையும் மனத்தாலும் நினைத்தாரில்லை; எவர்க்கும் எக் கொடுமையும் இழைத்தாரில்லை. இவ்வளவு துன்பமிழைத்தும் அத்தலைவன் இரக்கங் கொள்ளவில்லை. அவரைக் கொலைசெய்து விடலாமா அல்லது சித்ரவதை செய்யலாமா என்று கூட ஆலோசிக்கத் தொடங்கினன் எனின் அவன் கொண்டுள்ள கொடுமையை எவ்வாறு கணக்கிடுவது? அத்தலைவனின் மனைவி, இவ் வெண்ணிறத் தோன்பால் கொண்ட கழிவிரக்கத்தால் பார்க் எவ்விதத் தண்டனைக்கும் உள்ளாகாது தப்பித்தார். அவளது வேண்டுகோளைச் செவிமடுத்த தலைவனும் அவரிடமிருந்து பெற்ற பொருள்களை அவரிடம் திரும்பக் கொடுத்து, அவரை வேறு எவ்விதத்தும் இம்சிக்காது இருந்தான். அத்தலைவனை பார்க் பலவாறு வேண்டி அவ்விடம் இருந்து *ஜாரா நகர் நோக்கிச் செல்லும் ஒரு குதிரை வீரர் குழுவுடன் செல்லுவதற்கு அனுமதி பெற்றார். அத்தலைவனிடம்

* Jarra

இருந்து பார்க் தமது பல பொருள்களைப் பெற்று ரேனும் விலை மதிப்பற்றத் தமது உண்மை ஊழிய ஞன அடிமைத் துணைவன் டெம்பாவைப் பெற்று ரில்லை. அவனை அத்தலைவனே அடிமை கொண் டான். துணை மனிதரின்றி பார்க் தனி மனித ராஞர். உயிர் பிழைத்தாரேனும் உடல் பிழைத்தா ரில்லை. அக்குதிரை வீரரின் காவலுக் குட்பட்டே இருக்க வேண்டுவதாயிற்று. பல துன்பங்களுக் கிடையே அக்கூட்டம் ஜாராவையும் அடைந்தது.

சிறை நீக்கம்

இக் காவலேயன்றி மேற்கொண்டு ஏதும் தீங்கு நேரிடும் என்று பார்க் கருதவேயில்லை. ஒரு நாள் எதிர்பாரா வண்ணம் சில போர் வீரர்கள் அக் குழு வினர் உறைந்திருந்த இருக்கைக்கு வந் துற்றனர். மங்கோ பார்க்கைத் திரும்பத் தலைவனிடம் கோண்டு செல்லவே அவர்கள் ஆங்கு வந்தனர். தலைவனை அடைந்தால் தம் தலையே போனாலும் போய்விடும் என்று அனு பவங் கண்ட அறிஞர் உணர்ந்து கொண்டார். இத னின்று எவ்வாறேனும் தப்ப வேண்டும் என்று ஆலோசித்தார். அன்றிரவே தக்க சந்தர்ப்பமும் வாய்த்தது. வீரர்கள் அயர்ந்திருக்கும் நடுநிசிப் பொழுதில் தமக்குரிய பொருள்களையும், உடைகளை யும் பத்திரமாக எடுத்துக் கொண்டு, அக் கூட்டத் தினின்றும் பிரிந்து, தமது பரியின் மீது இவர்ந்து, கானகம் வழியே கடுகிச் சென்று, தப்பிப் பிழைத்தார். அத்தலைவனின் பிர தேசத்தை நீங்கி வேற்று நாடு சென்றுவிடவே அவர் விரும்பிஞர். இருள் மிக்க பயம் நிறைந்த அக் கானகமே அவர்க்கு அந் காட்டைவிட நலமுள்ள தாய்த் தோன்றியது. "கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டில் கடும்புலி வாழும் காடு நன்றே" என்பது உண்மை உரை அன்றோ?

உயிருடன் மன்றாடி அவர் செய்த இப் பயணம் அவருக்கு மிகக் களைப்பைத் தந்தது. கடும் பயணத்தால் மிகுந்த தாகமும் கொண்டார். குடி நீர் கிடைக்கப் பெறாமையால் பசும் தழைகளை மென்று விழுங்கினார். இரவு முழுவதும் பிரயாணமும்செய்து காலைக் கதிரவன் தோன்றும் சமயம் ஒரு நீர் நிலையின் அருகே இருப்பது கண்டு 'முடவனுக்குச் கொம்புத் தேன் கிட்டியதுபோன்று' நீரை அள்ளி யள்ளிப் பருகித் தாகந்தீர்ந்தார். தாகந்தீர்ந்தவர் ஆகத்தை வருத்துகின்ற அரும்பசியையும் அகற்ற எண்ணினார். அருகே தென்பட்ட ஒரு கிராமத்தை யடைந்தார். ஒரு சிறு குடிசையில் வசித்துவரும் கிழவியொருத்தி அவர்பால் நனி இரக்கங்கொண்டு சிறிது உணவு நல்கினள். 'பசித்தார் தின்னாதை தில்லை' என்பது போல் அது ஏழ்மை மிக்க உணவானாலும் பார்க் அதை வயிறார உண்டு பசி தீர்ந்து சிறிது தெம்பு கொண்டார். அவரது குதிரைக்கும் சிறிது உணவு கிடைத்தது.

நைஜர் நதி

குடிசை யருகில் வெள்ளையர் ஒருவரைக் காணலும், அக்கிராம மக்கள் அவரை வேடிக்கை காணக் குழுவாகத் திரண்டு வந்தனர். காணாத பொருளைக் காண்பதேபோன்று அவரைக் கண்டு வியப்புற்றனர். அக் குழுவினருள் பல மூர் மக்களும் இருந்தமையின் அவர் மனத்தில் அச்சமும் எழத் தொடங்கியது. லுடாமர் நாட்டுத் தலைவனின் ஆட்கள் அதில் எவரேனுமிருந்தால் தமக்குத் திரும்பவும் துன்பம் ஏற்படுமே என்று கலங்கினார். ஆகலின் அம்மக்களின் கண்ணிற் படாமல் இருப்பதே நன்றெனக் கொண்டு இரவு நேரத்தை அருகுள்ள ஓர் அடவியில் கழித்தார். மறுநாள் தம் பயணத்தைத் தொடர்ந்து நடத்தி பம்பாரா நாட்டைச் சேர்ந்த கிராமம் ஒன்

றைக் கிட்டி, அங்கேயே தங்கினர். சின்னட்கள் அங்கிருந்த பின்னர் அந்நாட்டின் தலைநகரான *செகோ நகரை நோக்கிச் செல்லும் நீக்ரோவர் களைத் துணை கொண்டு அவர்களுடன் சென்றார். வழியில் ஒரு அடிமைக் கூட்டமும் இவர்களுடன் சேர்ந்து கொண்டது. பல கஷ்ட நஷ்டங்களுக்குப் பிறகு ஒருவாறு அனைவரும் அத் தலை நகரைச் சேர்ந்தனர். இந்நகரை யடையு முன்பாக மங்கோ பார்க் †நைஜர் நதியைக் கண்ணுறக் கண்டு, அதன் பளிங்கு நீரை மனமாறப் பருகினர்.

செகோ நகரம்

உள் நாட்டில் தாம் கண்ட நகரம் யாவற்றிலும் செகோ சிறந்ததாக இருப்பதை பார்க் கண்டு மகிழ்ந்தார். நைஜர் நதியின் நீர்ப்பரப்பு அவருக்குப் பெரு மகிழ்வு தந்தது. பரந்த வெளியில் பளிங்கு போன்ற தெளிந்த நீரு டன் ஓடும் அந் நதியைக் கண்டு ஆனந்த முற்றார். நதியின் இரு புறத்திலும் அமைந்துள்ள அந் நகர வளம் இவர் மனத்தைப் பெரிதும் கவர்ந் தது. தமது வருகையை மன்னனுக்குத் தெரிவித்து அவனைக்காண விரும்பினர். அரசனது உத்தி ரவு கிட்டும் வரை ஒரு கிராமத்தில் தங்கியிருந்தார். பல நாட்கள் கழிந்த பிறகு அரசனிடமிருந்து உத் தரவு வந்தடைந்தது. நகரினுள்ளிருந்த அரசனைக் காண விழைந்த அவருக்கு வந்த உத்திரவு விநோத மானது; அந் நாட்டில் வழங்கும் நாணயமான சங்குகளில் ஐயாயிரம் பெற்றுக் கொண்டு, அந்நகர் விட்டு எங்கேனும் போய்விட வேண்டும் என்பதே அவ்வுத்திரவு. இவ்வரசனும் பார்க் வந்த நோக்க மறியாது சந்தேகித்தான் போலும்! நாடு காண வந்தவர் என்றால் நம் நாட்டை இவர் ஏன் காண

*Sego † River Niger

வேண்டும்? இதிலேதும் சூதிருக்கும்' எனக் கருதினன் போலும்.

தலைவனைத் தட்டவும் முடியுமோ? தலைவணங்கத்தான் வேண்டும். தன்னந் தனியராய் யாது செய்ய இயலும்? கட்டளைக்குக் கீழ்ப்படிந்தார். துணையொருவனைக் கூட்டிக்கொண்டு *சான்சான்டிங் என்னும் ஒரு பெரு நகர் நோக்கிச் செல்லலாயினர்.

தீங்கில்லாச் சிங்கம்

இப் பயணத்தில் அவர் வேறொரு புதுமையான ஆபத்தில் சிக்க நேர்ந்தார். உண்மையிலேயே, தம் எதிரே, ஒரு அரிமாவைக் கண்டார்; அதன் கூரிய கண்கள் இவர்களையே நோக்கி யிருப்பதைக் கண்டார்; குலை நடுக்கம் கொண்டார். அக்கேசரி கட்டாயம் தம் மீது பாய்ந்துவிடும் என்று பயந்து நடுங்கினர். ஆனால் அச்சிங்கம் 'தனக்கு ஏதும் தீது விளைவிக்காத இவர்மீது பாய்வானேன்' என்று மனத்திற் கொண்டது போலும்! இவர்க்குத் தீங்கு ஏதும் இழைத்திலது. ஒருவாறு தப்பிப் பிழைத்து அப்பால் சென்றார். கோளரிகூட நம்மீது அன்பு கொண்டிருக்கிறதே, என இறைவன் திருவருளை நினைந்து வணங்கினர்.

இப் பேராபத்தினின்றும் தப்பிய பின்னர் மாங்கோ பார்க் இன்னும் பலவிதக் கடுந்துன்பங்களை யடைய நேர்ந்தது. நைஜர் நதிக்கரையின்மேல் நோக்கிச் சென்றுகொண்டே யிருந்தார். அவரது குதிரை இனிச் சிறிதுகூட நடந்துவருவதற்கு இயலாத தாயிற்று. ஆனதால் அதை ஓரிடத்தில் விட்டுச் செல்லவேண்டிய தவசியமாயிற்று. அவருக்குத் துணையாக வந்த வழிகாட்டியும், அருகேயுள்ள தனதூர் சென்றுவிட்டான். அவர் உடுத்தியிருந்த

* Sansandig

உடைகளும் பலவாறு இழிந்து கந்தல் கந்த லாயிற்று. மாரிக்காலமும் தொடங்கி மழை பொழியலாயிற்று. * டிம்பக்டூ என்னும் திரும்புகை மாபெரும் நகரம் சேர வேண்டுமென பார்க் பேரவாக்கொண்டும் இத்தகைய இடையூறுகளால் அவ்வாறு சென்றடைவது இய லாததாயிற்று. இந் நிலையில் மேற்கொண்டு செல் லாது திரும்பிவிடுவதே சான்றுடையது என்று உணர்ந்து, வந்த வழியே திரும்பத் தொடங்கினர்.

திரும்பிச் செல்வதும் அவ்வளவு எளிதாயில்லை. பல கஷ்டங்களுக்குள்ளாகியே திரும்புமாறு நேரிட் டது. பம்பாரா நாட்டைக் கடந்து செல்லுங்கால் அந் நாட்டுத் தலைவன் இவர் தென்பட்டால் இவரைச் சிறைப் பிடித்து வரக் கட்டளை தாங்கிய பல வீரர்கள் இவரைத் தேடிக் கொண்டிருந்த செய்தி யறிந்தார். பல கிராமங்களின் வழியே கரந்துற்று, எதற்கும் அஞ்சாது சென்று கொண்டே இருந்தார். பல நாட்கள் உணவு கொள் ளாமலும் நடந்து சென்றார். இடையே ஒரு கிரா மத்தில் வர்த்தகம்செய்யும் ஒரு பெருந்தகையாளன் இவரை யெதிர்ப்பட்டு இவருக்கு உண்டியும் உறை யுளும் அளித்தான். சில நாட்கள் ஆங்குத் தங்கி யிருந்து பிரயாணம் தொடர்ந்தார். கொள்ளைக் காரர் குழுவொன்றும் தோன்றி இவர்வசம் எஞ்சி யுள்ள பொருள்களைக் கொள்ளை கொண்டனர். பலவாறாய பேரின்னல்களை உற்று, தாம் புறப்பட்ட பைசானியா நகரைத் திரும்ப வந்து சேர்ந்தனர்.

மூன்பு தங்கியிருந்த டாக்டர் லெய்ட்லி மாளி கையை அடைந்தனர். பார்க் அப்பொழுது கொண்

---

*Timbuctoo

டிருந்த தோற்றத்தைக் கண்டு அனைவரும் வருந்தினர். இருப்பினும் அவர் உயிருடன் திரும்பி வந்ததைக் கண்டு திருப்தியுற்றனர். முகத்தைமூடியிருந்த மயிரைக் களைந்தார்; கந்தல் துணிகளை உதறியெறிந்தார். லெய்ட்லி உவந்தளித்த மாற்றுடைகளை யணிந்தார். ஆங்கு ஆயத்தமாயிருந்த ஒரு கப்பலில் ஏறித் தென் கரோலினாவைச் சேர்ந்து, ஆங்கிருந்து இங்கிலாந்து அடைந்தார்.

சோர்ந்த நாடடைதல்

சுமார் இரண்டரை ஆண்டுகளுக்கு மேலாகப் பிரயாணம் செய்து திரும்பிய மங்கோ பார்க் தன் சொந்த நாடாகிய ஸ்காத்லாந்தை யடைந்து களிபேருவகை யுற்றார். ஆங்குச் சில காலம், தாம் முன்பு செய்து வந்த மருத்துவத் தொழிலை மேற்கொண்டார். எப்படியும் மறுமுறை சென்றாகிலும் தாம் முன் கொண்ட பணியை மேற்கொண்டு, நைஜர் நதி தீரத்தைக் காணவேண்டுமென்ற அவாவினை விட்டொழித்தாரில்லை. தாம் முன்பு பெற்ற அநுபவங்களால் அறிந்து கொண்டவாறு அவற்றினின்றும் தப்பி நின்று, வழி செய்து போகத் தக்க சாதனங்களைத் தயாரிக்கத் தொடங்கினர்.

பண்ட மாற்றுக்காக பல பொருள்களையும், பல போர் வீரர்களையும், தக்க துணைவர்களையும் கூட்டிக் குழுவொன்று திரட்டினர். இம்முறை இவர் வெற்றி காண்பது நிச்சயம் என்று அனைவரும் நம்பிக்கை கொண்டனர். பிரயாணம் புறப்பட்டு ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையை யடைந்து, தாம் முன்பு சென்ற வழியிலேயே செல்லத் தொடங்கினர். மாரிக் காலமும் தொடங்கியது. கடுஞ்சுரமும் தலைக்காட்ட ஆரம்

இரண்டாம் பயணம்

பித்தது சுரங்தாக்கிய வீரர் பலர் நலிவுற்றனர்; உற்ற நண்பர்கள் சிலர் இறந்தொழிந்தனர். எஞ்சிய சிலருடன் பார்க் தம் வழியே தொடர்ந்து சென்றார். நைஜர் நதியில் இவர்கள் ஒரு படகில் செல்லுங்கால் எதிர்பாரா வண்ணம் பேரிடைஞ்சல் ஒன்று தோன்றியது. உள்நாட்டு மக்களான பல முரடர்கள் எதிர்ப்பட்டனர். வெண்தோல் பூண்ட இவ்வங்கியரைக் காணலும் இவர்கள் பால் சீற்றம் கொண்டு கவண்கற்களையும் எறியீட்டிகளையும் வீசினர். அவர்களை யெதிர்த்து நிற்பது அசாத்தியமாயிற்று. அம்முரடர்களோ தொகையில் மிகுந்து நின்று கற்களை வீசிக்கொண்டே இருந்தனர். அவர்களிடமிருந்து தப்ப வேறு வழியின்றி நீரில் மூழ்கியேனும் உயிர் தப்பலாம் என நினைத்தார். அவ்வாறேயும் செய்தார். ஆனால் நீரில் மூழ்கியவர் திரும்ப எவ்விடத்தும் கரை யேறவில்லை!

அறிஞரின் அமரத்துவம்

ஸ்காத்லாந்தில் பிறந்து, பெருங்குடியராய் வாழ்ந்து, பேரறிஞராய்த் திகழ்ந்து, புதுமை காண விழைந்து, ஆப்பிரிக்காவில் நைஜர் நதியில் மூழ்கி உயிர் நீக்க நேர்ந்தது எத்துணை பரிதாபமானது! அவருடைய பருவுடல் மறைந்த படினும் நுண்ணுடல் என்றும் மறைந்திலது. ஆப்பிரிக்காவின் உள்நாட்டு விவரமறியாது அதை இருண்ட கண்டமாகக் கருதிய ஐரோப்பியருக்கு அதைப்பற்றிய இருள் கொண்ட அறிவைத் தாம் சென்று கண்ட விவரங்களால் ஒளி பெறச் செய்த பெருமை, மங்கோ பார்க்கையே சாரும். தமது உயிரையும் மதியாது துணிந்து சென்ற அப் பேரறிஞரின் மனோதிடம், புத்துலகம் காண விழையும் இளைஞர்க்கும் அறிஞர்கரும் ஊக்க மூட்ட வல்லது என்பது உரைத்தலும் வேண்டுமோ?

## 4. நீர்வீழ்ச்சி கண்ட நல்லறிஞர்

பதினெட்டாம் நூற்றாண்டில் புதுமை காணச் செல்ல விரும்பியவர்களும், முயற்சித்தவர்களும், தாம் செவியுறும் செல்வவளம் பற்றியே அவற்றைக் காண முற்பட்டனர்.

**மத போதனை**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்கிலாந்து, மற்றும் பல ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றிலிருந்து கிறிஸ்தவ மதத்தை உலகத்தின் பல பாகங்களிலும் பரப்ப வேண்டியும், கிறிஸ்து பெருமான் நல்லுரைகளை அறிவுறுத்தவும், பல மத போதனைச் சங்கங்களைச் சேர்ந்த பாதிரிகளும், அறிஞர்களும், பெரியோர்களும், போதகர்களும் பல இடங்களுக்கும் பரந்து சென்றனர். செல்வம் பெறும் நோக்கமோ, குடியேறும் நோக்கமோ, வெற்றி கொண்டு தமதாக்கிக் கொள்ள வேண்டும் என்ற நோக்கமோ ஆகிய இவற்றில் ஒன்றையும் எண்ணாது, தமது மதத்தைப் பரவச் செய்ய வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு இப் பெரியார்கள் பிரயாணம் செய்தனர். மத போதனையை முன்னிட்டு வெளிநாடு சென்று புதுமை கண்டு உலகுக்கு அறிவித்த அறிஞர்களுள் *டாக்டர் லிவிங்ஸ்டன் என்பாரும் ஒருவராவர்.

டாக்டர் லிவிங்ஸ்டன் இங்கிலாந்தைச் சேர்ந்த ஒரு மத போதகர். நாகரிகமின்றியும், அஞ்ஞான இருளில் ஆழ்ந்தும், வெளிநாட்டுத் தொடர்பு அற்றும் இருந்த இருண்ட கண்டமாகிய ஆப்பிரிக்காவில் கிறிஸ்து பெருமான் மணிமொழிகளை அறி

---

* Dr. Livingstone

வுறுத்தச் செல்லும் பணியை 1840-ம் ஆண்டில் மேற்கொண்டார். ஆங்குச் சுமார் பத்து ஆண்டு கட்கும் மேலாகவே இப்பெரும் பணியிலீடுபட்டு வந்தார். உள்நாட்டில் பல இடங்களுக்கும் சென்று ஆங்காங்கு வதிந்த அஞ்ஞான மக்கள் அறிவுச் சுடர் பெற்றுமிளிரும்படி செய்த பெருமை இவருக்கே உரித்தாகும். இதுவரையில் எவரும் சென்றிராத பல இடங்களுக்கும் சென்று தாம் கண்ட புதுமைகளை உலகுக்கு உணர்த்தியவராவர். *நகாமி ஏரிப் பரப்பையும், ‡ஸாம்பஸி நதிப் போக்கையும் கண்டு அறிந்தவர் இவரே.

டாக்டர் லிவிங்ஸ்டன்

டாக்டர் லிவிங்ஸ்டன், மதபோதனையும் செய்து கொண்டு ஆப்பிரிக்காவின் பெரும் பகுதியையும் காண விரும்பினார். விரும்பியவாறே செயலாற்றும் இயல்பும் படைத்த அவர், உள்நாடு அனைத்தையும் அறிய முயன்றார். இந்நோக்கத்துடன் 1852-ம் ஆண்டு ஆப்பிரிக்காவின் தலை நகராகிய †கேப் டவுன் விட்டு உள்நாடு நோக்கிப் புறப்பட்டார். அவர் ஓரெளிய போதகரே யன்றிக் கைவசம் பெரும் பொருளோ, போதிய வசதிகளோ பெற்றவர் அல்லர். சில பொதி மாடுகளும் ஒழுங்கற்ற ஒரு பண்டம் வைக்கும் வண்டியுமே அவரிடமிருந்த சாதனங்களாகும். ஆமை நடை நடக்கும் பொதி மாடுகளுடன் விரைவாக எவ்வாறு செல்ல இயலும்? பல மாதங்களும் வெயில் மழையில் வழி நடந்து ஆங்குற்றதொரு பாலை நிலத்தை அண்மினார். இதுவே §கலஹாரி பாலைவனம் எனப்படுவது.

பாலை நிலமும் பாதிரியாரும்

---

* Lake Ngami ‡ River Zambesi †Cape Town
§ Kalahari Desert

முயற்சியில் முன்னேற்றம் கொண்ட இவர், இக் கடும் பாலையைக் கடந்து செல்வதையும் கடுமையாகக் கொள்ளவில்லை. ஆங்குப் பல கொடு விலங்குகளும் நெடு மக்களும் உறைந்திருக்கக் கண்டார். இயற்கையில் முரட்டுத்தனம் வாய்ந்த அம் மனிதர்கள்கூட இவரிடம் பேரன்பு பூண்டு இவரிட்ட பணியைத் திட்டமாய்ச் செய்தனர்.

நெருப்பென எரிக்கும் வெப்பத்தில், தணலெனத் தகிக்கும் மணற் பரப்பில், பிரயாணம் செய்து *லின்யான்டி என்னுமிடம் வந்து சேர்ந்தார்.

**உயிரளிக்கும் உத்தமர்**

அவர் ஆங்கு வந்தடைந்த சின்னாட்களிலேயே அவ்வூர்த் தலைவன் இவருக்குப் பெரியதொரு நண்பனானான். இத் தலைவன், மதத் தலைவருக்குத் தேவைப்படும் அனைத்தையும் அளித்தான். அவ்வூர் மக்களும் இவரிடம் அளவிலா அன்பு கொண்டனர். இவர் மதபோதகர் அன்றியும் வைத்தியத் துறையிலும் தலை சிறந்த அநுபவம் பெற்றவர். அவருதவியால் குடிமக்கள் பலர் தாமுற்ற நோய் தீர்ந்தனர். தமக்கு உயிரளித்தவர் என இவரைப் போற்றினர். லிவிங்ஸ்டன் இங்கேயர்களுடன் பல மாதங்கள் தங்கியிருந்தார். அதன் சுற்றுப் புறங்களைக் கண்டறிந்தார். அந்நியர் குடியேறுவதற்கு ஏற்ற இடமாக அமையுமோ என ஆராய்ந்தார். அந்தப் பிரதேசம் வெப்பம் மிக்கதாகவும், தூய காற்று அற்றதாகவுமிருந்ததால் அதில் நாட்டங் கொள்ளவில்லை. கடைசியாக ஒரு தினம் அந் நட்பினரிடம் விடை பெற்றுப் பிரிந்து சென்றார். தமக்கு உயிர் கொடுத்த உத்தமர் ஊரை விட்டுப் போகின்றாரே என அவர்கள் மனம் வருந்தினர்.

---

† Linyanti

மத்திய ஆப்பிரிக்கா பிரதேசத்தில் லிவிங்ஸ்டன் வழி நடக்கத் தொடங்கினார். ஆங்குத் தோன்றிய ஆறுகளான *லீபா, †லீயாம்பி என்பன வற்றின் போக்கைக் கண்டறிந்தார். அவை பாய்ந்தோடும் வெளிகளையும் பார்த்தறிந்தார். அந்தச் சமவெளியில் இயற்கை எழில் இலங்கியது. பற்பல பயிர்களும் பரந்த வெளிகளில் விளங்கின. கனி தரும் தருக்கள் பல்கி நின்றன. மணம் வீசும் மலர்கள் மிகுதியா யிருந்தன. விதவிதமான வண்ணப் பறவைகள் வானில் வட்டமிட்டன. கலை மான்கள் கூட்டங் கூட்டமாய் ஓடின. கருங்குன்றன்ன கரிகளும் கடுகி நடந்தன. கண்டோர் கலங்கும் காண்டா மிருகம் என்னும் அதிசய விலங்குகள் மதங்கொண்டு ஓடின. வேட்டையில் விருப்பங் கொண்ட லிவிங்ஸ்டனுக்குப் பொழுது போவதே தெரியவில்லை. தாம் விரும்பியவாறு வேட்டையாடிக் களித்தார். சுவை மிக்கக் கனிகளை உண்டு பசி விண்டார்.

சமவெளிச் சிறப்பு

இச் சிறப்புக்கள் பெற்ற இந்தச் சமவெளிப் பிரதேசத்தில் பல பல இடங்களில் குடி மக்களும் வசித்து வந்தனர். ஒவ்வொரு தொகுதிக்கும் ஒரு தலைவன் தென்பட்டான். சில இடங்களில் தலைமை தாங்கும் தலைவியும் தோற்ற மளித்தாள். பேராற்றல் படைத்த பெண் மக்கள்போலும் இத் தலைவிகள்! ஆடவரும் பின்னிடும் நடையுடையவர்கள்! இவர் தம் பயங்கரத் தோற்றமே தலைமைக்கு ஏற்றதாக அமைந்ததுபோலும். இத் தலைவர்களும் தலைவிகளும் இவரை விருந்தினராகக்கொண்டு, வேண்டிய வசதிகளளித்தனர்.

தலைவிகள்

---

*Leeba †Leeyambye

**அடிமை கொள்ளும் கொடுமை**

அடிமை கொள்ளும் பேதமை நிறைந்திருந்த காலம் அது. எளியோரையும் மெலிந்தோரையும் மிரட்டி அடிமை கொண்ட காலமது. பணத்தாலும் பலத்தாலும் ஏழைகளை அடிமை பிடித்த காலம் அது. இத்தொழிலில் பொருளீட்டும் வாணிபம் செய்வோர் அக்காலத்தில் பல்கி இருந்தனர். ஐம்பெரும் பூதங்கள் எனப்படும் ஐம்புலன்களுக்கும் அடிமைப்பட்ட ஒருவன், தன்னைப் போன்ற மற்றொரு மானிடனை அடிமை கொள்ளுவதை மத போதகர் வெறுத்தார். அவ்வணிகர்களிடம் வாய்விட்டுப் பேசினார். இறைவனுக்குப் பிடிக்காத இத்தொழிலைப் புரியாதீர்கள் என்று இன்னுரை பகர்ந்தார். பொருளீட்டக் கொலைத் தொழிலைக் கூடக் கொஞ்சமும் அஞ்சாது செய்ய முற்படும் இவ்வணிகர்களா இவரது இன்னுரைகளை ஏற்றுக் கொள்வர்?

**போதகரின் போதனை**

அவ்வணிகர்கள் இவர்பால் வெறுப்பும் அச்சமும் கொண்டனர். போதனை புரிய வந்த இவருக்குப் போதனையொன்று அளிக்கவேண்டும் எனக் கருத்தில் கொண்டனர். சில முரடர்களை ஏவி, இவரது உடைமைகளைப் பறிக்கத் தூண்டினர். இன்சொல்லேயன்றி வேறொன்றையும் பகராத அவரெதிரில் எதிரிகள் என் செய இயலும்? அவராக ஈந்த பொதி மாடு ஒன்றை விரும்பி எடுத்துச் சென்றனர்!

எவ்வித இன்னலுக்கும் ஆளாகாது லிவிங்ஸ்டன், போர்த்துகீசியர் குடியேறி யிருந்த ஒரு பிரதேசத்தை யடைந்தார். அங்கு போர்த்துகீசியரும், அந்நாட்டு மக்களும் ஒன்றி வாழ்ந்து

வருவதைக் கண்டு மன மகிழ்ந்தார். இவரை விரும்பி வரவேற்று வசதிகள் வழங்கினர். லிவிங்ஸ் டன் இவ்விடம் தமக்குத் தேவையான பலபொருள் களையும் பெற்றுக் கொண்டார். பண்ட மாற்றாகத் தம்மிடமிருந்த பலபொருள் களையும் ஈடு செய்தார். இவர் போகு மிடங்களுக்கு வழிகாட்டிச் செல்ல சில துணைவர்களையும் ஏற்பாடு செய்து கொண்டார்.

குடியேற்ற நாடு

இவர் மேற்கொண்ட இந்தப் பயணத்தில் பன் முறை கடும் சுரத்தால் பீடிக்கப் பட்டார். கடும் சுரம் தொடர்ந்து நிலவுவதாயிற்று. இவர் மற்றும் பல ஊர்களுக்கும் போகவேண்டும் என முயற்சித் தாலும் நலமற்றிருந்த உடல் நிலையுடன் செல்வது அரிதாயிற்று. திரும்பவும் லின்யாண்டியிலேயே சிறிது நாட்கள் தங்கியிருந்து பின் அருகேயுள்ள *லோண்டா என்னும் பெருநகர் நோக்கிச் செல்ல லானார். இந்தப் பிரதேசம் மிகவும் வளம் பொருந்தியதாகத் தோற்றியது. புகையிலைப் பயிர் செழித் தோங்கி வளர்ந்திருந்தது. உணவுக்காகும் பல பறவைகள் நிறைந்திருந்தன. வானவில் தரையிலேயே தோன்றுவது போன்று பல இடங் களிலும் பல வண்ணப் புஷ்பங்கள் படர்ந்து வனப் பைப் பரப்பின. இது அளவிடற்கரிய அழகு வாய்ந்த பகுதியாக இருப்பினும் பல கிராமங்கள் பாழ்பட்டிருந்தன. இஃது அடிமை வர்த்தகர் புரிந்த அடாச் செயலால் நிகழ்ந்ததே யாகும்.

லோண்டாவை நோக்கிச் சென்று கொண் டிருக்குங்கால் சமவெளிப் பிரதேசத்தில் பல குன்றுகளும், சில மலைகளும் குறுக்கிட்டு நின்றன வானளாவிய மரங்கள் நிறைந்த வெற்புகள் அவை

* Loanda

குன்றுகள் கருங்குன்றுகளானலும், தளிர் விட்டுத் தழைத் தோங்கிக் கவிழ்ந்திருந்த பசு மரங்களின் தோற்றத்தால் பசுமலைகளாகத் திகழ்ந்தன. இவ் வரைகளி னின்றும் நீர்க்கோடுகள் வரைந்தாற் போன்ற பூம்புனலருவிகள் பளிங்கன்ன நீருடன் விரைந்து வந்தன. மலைவளம் மல்கிய இப் பிரதேசத்தில் மந்த மாருதம் மெல்லென வீசியது. உடல் நலம் குன்றி யிருந்த பேரறிஞருக்கு இவ் அருங் காட்சிகளும், தென்றற் காற்றும் தெம்பு ஊட்டின.

இந்தச் செழுமையான பிரதேசத்தின் வழியே வழி நடந்து ஸாம்பஸி நதியின் கரையோரமாகச் சென்றனர். ஆங்கோரிடத்தில் நீல வானில் வெண் புகைப் படலம் போன்றும், பனிநீர்ப் படலம் பறப்பது போன்றும் அரியதொரு காட்சி புலனயிற்று. ஆதவனின் பொற் கதிர்கள் அவற்றை, ஊடுருவிச் செல்லும் போது இயற்கையாகவும் செயற்கையாகவும் உள்ள பல வர்ணங்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. ஒரு சமயம் பளிச் சென்று செந்நிறம் தோன்றும்; உடனே அது மாறுபட்டுப் பொன் னிறமாகும்; அது கண்டு மகிழ்ச்சியில் திளைந்தால் அதற்குள் அதுமாறித் தரையில் நிலவும் பசுமையை வானில் அமைக்கும். இதுவரை வறண்ட பாலை யையும், இருண்ட அடவிகளையுமே கண்டுவந்த லிவிங்ஸ்டனுக்கு இத்தோற்றம் பெரும் வியப்பை யும் தனி மன மகிழ்ச்சியையும் அளித்தது.

அற்புதக் காட்சி

இப்பெரு மகிழ்வால் தம்மையும் மறந்து நின் றார் லிவிங்ஸ்டன். தம் கண்களையே அவரால் நம்ப முடியவில்லை. இத்தோற்றம் எங்கிருந்து உண்டா கிறது என்று அறிய விரும்பினர். சற்று இன்னும்

நெருங்கிச் செல்லுங்கால் செவிகள் செவிடுபடும்படி
பேரொலி முழங்கியது. இதன் காரண மறியாது
அவர் திகைத்தார். பின்னும் சிறிது தூரம் செல்ல

நீர் வீழ்ச்சி

லும் அஃதொரு நீர்வீழ்ச்சியின் அரும்
பெரும் தோற்றம் என்பது கண்டார்.
அந்நீர்வீழ்ச்சி ஏறக்குறைய ஒரு மைல்
அகலம் பரந்து நிலவியுள்ளது; நானூறு அடி உய
ரத்தினின்றும் கீழ் நோக்கி வருவது பளிங்குபோல்
ஒளி மிளிரும் அந்நீர்ப் படலம் வெள்ளித் தகடு
உருண்டோடி வருவதுபோல் தோற்றமளித்தது.
அத்துணை உயரத்திலிருந்து அத்துணைப் பரந்த
அளவில் வருவதானாலும், தரையை வந்தடை
யும்போது ஐம்பது அடி அகலமேயுள்ள இடத்தில்
தான் பாய்ந்து செல்லுகிறது. நீர் செல்ல வேண்டிய
பரப்பளவு குறுகி விடுவதாலேயே பேரொலி எழும்
பியது; நீர்த்திவலைகள் ஆவிபோல் பறந்து சென்
றன. இக்கண்கொள்ளாக் காட்சியை முதன் முதல்
கண்டறிந்த அந்நியர் டாக்டர் லிவிங்ஸ்டன் தான்.
இதுவே பின்னர் விக்டோரியா நீர் வீழ்ச்சி எனப்
பெயர் பெற்றது.

நீர்வீழ்ச்சியின் அருகே சோலைகளும் கவின்
பெற மிளிர்ந்தன. பக்கவில் பல கிராமங்களும் நில
வின. பல காட்டெருமைகளும், நிலை பெயர்ந்து
வரும் குன்றெனத் தோற்றும் கரிய

வேழ வேட்டை

களிறுகளும், மலிந்து கிடந்தன. ஆங்
குள்ள மக்கள் இவ் யானைகளை வேட்டை
யாடிப் பிடித்து அதன் ஊனைப் பக்கு
வம் செய்து உண்கின்றனர். பன்னூறு ஈட்டிகளை
விட்டெறிந்தே இவற்றைக் கீழே விழச் செய்கின்ற
னர். இம் மக்களுடன் வேழ வேட்டையாட விழைந்
தார் லிவிங்ஸ்டன். இங்குள்ள யானைகள் நீரிலும்
நீந்திச் சென்றது விந்தையாகவே இருந்தது.

காட்டெருமைகள் யானைப்பலம் கொண்டவையாக உள்ளன. இவை மனிதர்களை வெருட்டி யடித்து நீண்டு, வளைந்து, கூர்மையாக உள்ள தமது கொம்புகளால் தூக்கிச் செல்லும் ஆற்றல் வாய்ந்தவை. ஆங்கு வாழ்ந்த மக்கள் பற்பல பழக்க வழக்கங்களைக் கொண்டு விளங்கினார்கள். ஆங்கு வசித்த பெண் மக்கள் தமது முடியை வாரிப் பின்னி விட்டிருந்தது அவருக்குப் பெரு மகிழ்ச்சி யளித்தது.

**நாடடைதல்**

இவ் வளப்பங்களை உள் நாடுகளில் கண்டு மகிழ்ந்து போர்த்துகீசியர் குடியேறிய *டெட்டே என்னும் பகுதியில் ஒரு திங்கள் தங்கியிருந்து களைப்பு நீங்கினார். அதன்பின் தன் சொந்த நாடு நோக்கித் திரும்பிப் பிரயாணம் செய்து 1856-ம் ஆண்டு, அதாவது தான் புறப்பட்ட பதினாறு ஆண்டுகளுக்குப் பிறகு இங்கிலாந்தை அடைந்தார். திரும்பி வந்து சேர்ந்த இந்த அறிஞரைப் பலரும் சுற்றி வந்து அளவளாவினர். கண்டறிந்த காட்சியைக் கேட்டறிந்தனர். நீர்வீழ்ச்சிக் காட்சியை நேரிற் கண்டதாகவே மகிழ்ந்தனர். நீர்வீழ்ச்சி கண்ட நல்லறிஞராக இவரைக் கொண்டாடினர்.

---

* Tette

## 5. அறிஞரைக் காணும் அவா

பல்லோரும் போற்ற டாக்டர் லிவிங்ஸ்டன் இங்கிலாந்தில் தமது உறைவிடத்தே இரண்டாண்டுகள் தங்கியிருந்தார். தாம் எண்ணங்கொண்ட பணியையும், மற்றும் பாராத பல இடங்களைக் காண்பதையும் மேற் கொள்ளவேண்டும் என்ற அவா மிக்கவரானார். 1858-ம் ஆண்டில் அவர் இரண்டாம் முறையாக ஆப்பிரிக்காவுக்குப் புறப்பட்டார். ஆங்குச் சென்றடைந்த பின், பல ஏரிகளையும், ஏரிப்பிரதேசங்களையும் துருவிப் பார்த்தார். தாம் முன்பு தங்கியிருந்த லின்யான்டி என்னும் ஊரையும் அடைந்தார். இம்முறை தக்க துணைவர்கள் இருந்ததால் அவர்களுடன் சேர்ந்து வேட்டை பல புரிந்தார்; வேழ வேட்டையில் ஈடுபட்டார்; கொடு விலங்குகளைக் கொன்று குவித்தார். செல்லுமிடமெங்கும் இன்பமாய்ப் பொழுது போக்கிப் பல வளங்களும் கண்டார். தாம் முன்பு கண்டு களித்த விக்டோரியா நீர்வீழ்ச்சியை மறுமுறையும் கண்ணாரக் கண்டனர். பல தினங்கள் அக் காட்சியின் எழிலைப் பருகி ஆங்கு நின்றனர். மற்றும் அவர் முன் கண்ட கவின் மிக்கப் பிரதேசங்களையும், பல்வேறு புதிய பிரதேசங்களையும் கண்டு மகிழ்ந்தார். இவ்வாறு இடைவிடாது எட்டாண்டுகள் பிரயாணம் செய்து இங்கிலாந்து திரும்பினார்.

இரண்டாம் பிரயாணம்

அரும் பணியில் ஈடுபட்டார்க்கு அமைதியும் உண்டோ? முதிர்ந்த வயதெய்தி யிருந்தும், உடல் மிக மெலிவுற்றிருந்தும் மத போதனையிலும், புதுமை காண்பதிலும் களி மதங்கொண்ட டாக்டர்

**மூன்றாம் பயணம்**

லிவிங்ஸ்டன் மிகுதியிருந்த தம் வாணாளை வீணாளாகக் கழிக்க விரும்பவில்லை. உலகெங்கும் சுற்றிப் பாராவிடினும் ஒரு கண்டத்தையேனும் முற்றும் ஆராய்ந்தோம் என்ற மனத் திருப்தி இருக்க வேண்டும் என்ற எண்ணமே மேலிட்டவரானார். பலவித வசதிகளும் பெற்று, உற்ற துணைவரும், ஏவலரும், காவலரும் பின் தொடரப் பேரறிஞர் மூன்றாம் முறையாக 1866-ம் ஆண்டில் ஆப்பிரிக்காப் பிரயாணத்தை மேற்கொண்டார். பண்டமாற்றுக்காகப் பல பண்டப் பொதிகளையும் கொண்டு சென்றார்.

**முதுமையும் மெலிமையும்**

பற்பல வசதிகளையும் சாதனங்களையும், துணைவர்களையும் பெற்றிருந்தும் லிவிங்ஸ்டன் முன்பெல்லாம் சென்றது போலப் பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்த முடியவில்லை. முதுமையும் மெலிமையும் அவரை முன்னேறிச் செல்ல விடவில்லை. பன்முறையும் அவரைக் கடும் சுரம் கிட்டி வாட்டியது. கேடுற்ற உடல் சீர்பெற்று வருமாறு பல திங்கள்கள் தங்க நேரிட்டது. உடல் நிலை இடங்கொடுக்கும் சமயங்களில் முடிந்த வரையில் உள்நாடு சென்று ஆராய்ந்து வருவார். ஏரிகளும் ஆறுகளும் இருப்பதாகச் சொல்லும் இடங்கட்கெல்லாம் செல்வார். இவரைக் கண்டோர் இவர் 'நீர்ப்பித்துக்' கொண்டவர் போலும் என்று எண்ணும்படி, அவ்விடங்கட்கெல்லாம் தவறாது செல்வார். ஆப்பிரிக்காவில் அவர் கண்டுபிடித்து அறிவுறுத்திய ஏரிகள் கணக்கிலடங்கா.

பேரறிஞர் சென்ற இடமெங்கும் நல் வரவும் நன் மதிப்பும் பெற்றார். ஆங்காங்குத் தோன்றிய

தலைவர்கள்பால் அன்புகொண்டு, அவர்கள் ஆதரவை மிகுதியும் பெற்றார். திரைகடலென்னத் திகழ்ந்திருந்த ஒரு பெரு நீர்ப்பரப்பைக் கண்ணுற்றார். அதனைச் சிறு கடல் என்றும் கூறலாம்.

**பல்லக்குப் பயணம்**

இந்நீர்ப்பரப்பு தங்கநயிகா என்னும் ஏரியாகும். செழிப்புற்ற அப் பிரதேசத்தில் சில நாட்கள் தங்கியிருக்கத் திட்டம் கொண்டார். ஆனாலும் அவரை வாட்டும் சுர நோய் மறுபடியும் இங்குத் தோன்றியது. இம்முறை இச் சுரத்தால் தமக்கிருந்த சிறிது தேக வன்மையையும் இழந்தார். நடந்து செல்லவும் திடமிழந்தார். துணைவர்கள் பல்லக்குப் போன்றதொரு இருக்கையை அமைத்து அதில் அவரை அமரச்செய்து தூக்கிச் சென்றனர். மனிதனை மனிதன் சுமந்து செல்வதை அவர் விரும்பவில்லையானாலும் அவ்வாறு செல்லுவது இன்றியமையாததாக நேர்ந்ததினால் ஒருவாறு மனமொப்பி இருக்கையிலிருந்துகொண்டே பயணம் தொடர்ந்தார்.

**மலைவாசம்**

ஏரியைச் சுற்றிச் செல்லுவதைவிட அதைக் கடந்து செல்வதே நன்றென உணர்ந்தார். அதற்குத் தகுந்த ஆயத்தங்களைச் செய்து கொண்டார். உறுதியுள்ள தெப்பம் அமைத்து அந்த ஏரியைக் கடந்துசென்று மறு கரையிலுள்ள *உஜிஜி என்னும் நகரை அடைந்தார். ஆங்குச் சில நாட்கள் தங்கி இளைப்பாறி பம்பாரா நகர் நோக்கிச்செல்ல எண்ணங்கொண்டு தம் துணைவருடன் வழி நடந்தார். இவர் கடந்துசென்ற சமவெளி செழுமையாயிருந்

---

* Ujiji

தது. பல குன்றுகளும் சில மலைகளும் குறுக்கிட்டு நின்றன. குன்றுகளிலும் மக்கள் வசித்து வந்தனர். குன்றுகளின் மேலும், மலைகளின் மீதும் பல கிராமங்களும் சில நகரங்களும் பொருந்தி யிருந்தன. இவ்வித மலைவெளி நகரங்களில் லிவிங்ஸ்டன் பல நாட்கள் தங்கி யிருந்தார். அவை வசிப்பதற்குத் தகுதியாகவும், ஆங்கு வீசும் காற்று உடலுக்கு ஆரோக்கியத்தை அளிப்பதாகவும் அமைந்திருந்தன. மலைக் காட்சிகளையும், இயற்கை எழில்களையும் கண்டு மகிழ்ந்து சின்னாட்களுக்குப்பின் திரும்பவும் உஜிஜி நகருக்கே வந்து சேர்ந்தார்.

பேரறிஞர் டாக்டர் பெருமகனார் லிவிங்ஸ்டன் இவ்வாறு இருண்ட கண்டத்திற்குத் தமது வயோதிக வயதில் மூன்றாம் முறையாகப் புறப்பட்டுச் சென்ற பின் கடந்த ஐந்து ஆண்டுகளுக்கும் மேலாகவே அவரைப் பற்றிய செய்தி எதுவும் இங்கிலாந்துக்கோ அல்லது வேறு எந் நாட்டிற்கோ எட்டவில்லை. அவர் உயிருடன் இருப்பதும் இறந்துவிட்டதும் எவருக்கும் தெரியாதிருந்தது. எந் நாட்டவரும் போற்றத்தக்க அவரைப் பற்றிய செய்தி எதுவும் கிடைக்காததுபற்றிப் பலரும் கவலை கொண்டனர். அவரது பிரயாண விவரங்களை அறிய முற்பட்டனர். பல கழகங்களும், பல காரியாலயங்களும், பத்திரிகாலயங்களும் இம் முயற்சியில் ஈடுபடலாயின; பலரை ஆப்பிரிக்காக் கண்டத்திற்கு அனுப்பினார்கள். அமெரிக்க நாட்டின் *நியூயார்க் நகரிலுள்ள ஒரு பெருத்த பத்திரிகாலயத்தின் சார்பாக †ஸ்டேன்லி என்னும் பெருமகனை

அறிஞரை அறிய அவா

---

* New York † Stanley

ரும் இவ்வாறு லிவிங்ஸ்டனைத் தேடி வந்தவருள் ஒருவராவர்.

பரந்ததொரு கண்டத்தில் பிரயாணம் செய்யும் ஒருவரை, எங்கு என்று குறிப்பிட்டுத் தேடுவது? லிவிங்ஸ்டனின் தன்மையை உணர்ந்து, அவர் நகரங்களில் தங்கி யிருக்கமாட்டார், நதிகளின் பக்கமும், நீர்வீழ்ச்சிகளின் பக்கத்திலும்தான் இருப்பார் எனக் குறிப்பாக அறிந்து கொண்டார். அவ்வாறுய பல இடங்களையும் அடைந்து அறிஞரைப்பற்றி விசாரித்தார். சில இடங்களில் அவர் முன்பு வந்து சென்ற செய்தியை யறிந்து கடைசியாக உஜிஜி நகர் வந்தடைந்து, ஆங்கும் விசாரித்தார். தான் வெகு நாட்களாகத் தேடிவந்த அரிய பொக்கிஷம், அறிவுச் சுடர், வயது முதிர்ந்த அறிஞர், டாக்டர் லிவிங்ஸ்டன் உடல் நலிவு கொண்டு அருகிலுள்ளதொரு கிராம வெளியில் தங்கியிருப்பதாகச் செய்தி யறிந்தார். அவரடைந்த மகிழ்வுக்கோர் எல்லையில்லை. டாக்டர் பெருமகனார் இன்னும் உயிருடன் இருப்பது அறிந்து இறும்பூதெய்தினார். விரைவாக ஓட்டோடியும் சென்று அருகிருந்த கிராமத்தை அடைந்தார்.

செய்தி அறிந்த ஸ்டேன்லி

ஆங்கு ஒரு மலையின் தோற்றம்; மலை வீழ் அருவிகள் சூரிய ஒளி பட்டு வெண் முத்துக்கள் தொகுதியாக உருண்டு உருண்டு ஓடி வருவது போன்ற காட்சியை அளித்து விளங்குகின்றன. ஒரு பரந்த ஏரி; அடிப் பரப்பில் உள்ள கிளிஞ்சல், பாசி, முதலிய பொருள்களும் சூரிய ஒளியில் பளிச்செனப் பிரகாசிக்கின்றன - ஏரி நீர் அவ்வளவு தெளிந்த நீர். சிற்றலை தோன்றுவதால்தான் அதனை ஏரி என

ஏரிக்கரை

அறியலாம். அலைகளில்லாதபோது பளிச்செனவீசும் பகலவனின் கதிர்கள் அந் நீர்ப் பரப்பில் ஊடுருவிச்சென்று பல வர்ணங்களையும் உண்டு பண்ணுவதினால் ஏற்படும் ஒரே வெண்மையான வெளிச்சம் மட்டும் தோன்றியதே தவிர, அவ் வேரியில் நிறைந்துள்ள நீர்ப் பரப்பு தென்படவே யில்லை. ஏரியைச் சார்ந்த வெளிகளில் பயிர்கள் செழித்தோங்கி வளர்ந்து, ஆடி ஆடி அசைந்தன. அவற்றில் மிகுந்துள்ள தானியங்கள் ஒன்றுடன் ஒன்று உராய்வதால் ஏற்படும் சலசலப்புச் சப்தம், சிற்றலைகளின் ஒலியையும் தாழ்த்திவிட்டது. கிராம மக்களும், ஏவலரும், சுமை தூக்கிகளும் மற்றும் பலரும் சூழ்ந்திருக்க அக் கடும் வெயிலில் அந்த ஏரிக் கரையில் செழித்திருந்த வளனை உற்றுநோக்கி நின்று கொண்டிருக்கிறார் டாக்டர் லிவிங்ஸ்டன்.

'உடல் நலிவுற்றுத் தங்கியிருக்கிறார்' எனச் செவியுற்ற ஸ்டேன்லி, தான் அவரை எந்நிலையில் காண்பேமோ என்ற அச்சம் மேலிட்டவராகவே அவ்வாறு விரைந்தோடி வந்தார். லிவிங்ஸ்டன் இருக்கும் இடத்தை அறிந்து கொள்வதில் அவர் அதிகப் பிரயாசை எடுக்க அவசியமில்லாது போயிற்று. ஏரிக்கரைக் காட்சி வெகு தூரத்திற்கு அப்பாலேயே தென்பட்டது. ஆவலுடன் ஓடினார்; அக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு சென்றார்; லிவிங்ஸ்டன் முன்பாக நின்றார்; ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். மகிழ்ச்சி மேலீட்டினால் முதலில் என்ன பேசுவது என்பதும் தோன்றாது மதி மயங்கி நின்றார். இருவரும் கை குலுக்கினர்; வந்தனம் கூறிக்கொண்டனர்; உடல் நலம் கோரிக்கொண்டனர். பின் உறைவிடம் சேர்ந்து பல நேரம் அளவளாவினர். தமது நாட்டுச் செய்திகளை ஆவலுடன் கேட்டறிந்து கொண்டார்

சந்திப்பு

லிவிங்ஸ்டன்; தமக்குச் செய்தியாக வந்துள்ள கடி
தங்கள் அனைத்தையும் படித்தார்; தாம் அவர்க
ளோடு எதிரே நின்று பேசுவதுபோல் எண்ணி
மகிழ்ச்சி கொண்டார். சொந்த நாட்டுச் செய்தி
களையும், சொந்த நாட்டு நண்பர்களையும் பற்றிக்
கேட்டறிந்து மகிழ்ச்சிகொண்டு உளம் பூரிக்காத
மக்கள் எவரிருக்கிறார்கள்!

சின்னாட்கள் இருவரும் இன்புடன் அளவளாவி
இருந்தபின் லிவிங்ஸ்டன் தமது பிரயாணத்தைத்
திரும்பவும் தொடங்கினார். * தங்கநயிகா ஏரிப் பிர
தேசம் நோக்கிச் செல்லலுற்றார். வழியில் பல துன்
பங்களையடைய நேர்ந்தது. வயோதிக அறிஞர்
பெரிதும் தொந்தரைக்குள்ளாக நேரிட்டது.
ஸ்டேன்லி அவரிடம் பல தடவையும் பலவாறும்
கெஞ்சிக் கேட்டும் ஏரியைக் காணாது நாடு திரும்ப
மறுத்துவிட்டார். தம் உடல் நிலையையும் அவர்
பொருட்படுத்தவில்லை; ஒரு மிடுக்கான வாலிப
னுக்கு இருக்கும் தைரியமும் ஊக்கமும் மனோவேக
மும் அம்முதிய அறிஞருக்கு இருந்தன.

ஸ்டேன்லி டாக்டரைக் கைபிடித்துத் தாங்கி
அழைத்துச் சென்றார்; அவரைவிட்டு அகலா
மலேயே இருந்துவந்தார். லிவிங்ஸ்டன் தொடர்ந்து
செல்ல வேண்டும் என்ற திடங்கொண்டிருந்தாரே

அறிஞரின் உறுதி

ஒழிய, நாடு திரும்பி அவருடன் செல்ல
வேண்டும் என எண்ணவே இல்லை.
பன்முறை வற்புறுத்தியும் அவர்
கேளாததால் ஸ்டேன்லி தாம் மட்டும்
திரும்பிப் போக விடைபெற்று, அவரைவிட்டகலா
மனத்துடன் அகன்று சென்றார்.

---

* Tanganyika

ஸ்டேன்லி தம்மைவிட்டுச் சென்ற பின்னரும் இரண்டு ஆண்டுகள் பிரயாணம் செய்தார் லிவிங்ஸ்டன். தங்கநயிகா ஏரியின் கீழ்க் கரையையும் அடைந்துவிட்டார். அவர் கொண்ட எண்ணம் முடிவுபெற்றது. கடுங் கோடையும் கிட்டி முடிவு யது. அறிஞர் வெப்பம் தாங்கமாட்டாது பல சமயம் வருந்தினார்; சுருண்டு சுருண்டு கீழ் விழுந்தார். தேகத்திலிருந்த உதிரமும் கெடுவதாயிற்று. கடுப்பு நோயுற்றார். 1873-ம் ஆண்டு மே மாதம் முதல் நாளன்று தமது படுக்கையில் மண்டியிட்டுத் தொழுதவண்ணம் மூடிய கண்களுடன், அசையா உடலத்துடன் காட்சியளித்து அறிஞர் உயிர் நீத்தார்.

பேரறிஞரின் முடிவு ஆப்பிரிக்கா இருண்ட கண்டத்தில், தெரியாத இடத்தில், அறிமுகமில்லாப் பிரதேசத்தில் ஏற்பட்டது. இவரை மீட்டுக்கொண்டு செல்ல வேண்டும் என்று வந்த ஸ்டேன்லியுடன் அறிஞர் சென்றாரோ? இல்லை. தமது பணி எஞ்சியுள்ளது; அது கண்ட பின்தான் நிம்மதி கொள்ளலாம் என்றது அவரது உறுதியான உள்ளம். உடலம் தளர்ந்தாலும் அவர் உள்ளம் தளரவில்லை; உறுதியாய் வர மறுத்தார். முதுமையிலும் தமது உடல் நலத்தைப் பேணினாரில்லை. இதுவன்றோ தொட்ட கருமத்தைத் திட்டமுடன் செய்து முடிக்கும் பேராற்றல்! வாலிபர்களுக்கு இதுவன்றோ சிறந்த எடுத்துக்காட்டு!

---

# 6. இரு துருவங்கள்

இயற்கை அன்னையின் சிருஷ்டியை எவரால் அளவிட முடியும்? இயற்கை அன்னை அமைத்த யாவற்றையும் மானிடனால் கண்டு மகிழ முடியுமோ!

**இயற்கை**

இயற்கையில் அமைந்த உலகம் எவ்வாறுயது? உருண்டை வடிவமாய் அமைந்துள்ளது என்பது பூகோள ஆராய்ச்சியாளர்கள் கண்ட முடிவு. பந்து போல் உருண்டை வடிவில் பரந்துள்ள உலகப் பரப்பில் பல்வேறு பெருங் கடல்களும், பற்பல தீவுகளும், பல கண்டங்களும் பரவியுள்ளன. பூப் பிரதேசம் எவ்வாறு அமைந்துள்ளது? ஒரு புறம் பெரு நீர் வெளி, மறு புறம் மாமலைத் தோற்றம்; ஒருபுறம் மகிழ்வூட்டும் மருதம், மறுபுறம் அடர்ந்த அடவிகள்; ஒரு புறம் செழித்த சமவெளி; மறுபுறம் வறண்ட பாலை; இவ்வாறு பல்வேறு இடங்களும் பல்வேறு இயல்பாய் அமைந்துள்ளன.

**பிரதேசங்களின் தன்மை**

உலகில் எல்லாப் பாகங்களும் வெப்பதட்ப நிலையில் ஒரே நிலையாக உள்ளனவோ? இல்லை. ஓரிடம் நெருப்பென எரிக்கும் மிகுந்த வெப்பம் உள்ளதாக இருக்கிறது; மற்றோரிடம் நடுநிலையான வெப்பமுள்ளதாக இருக்கிறது; ஓரிடம் சிறிது குளிர் பொருந்தியதாக உள்ளது, மற்றோரிடம் குளிர் தாங்க முடியாததாக அமைந்துள்ளது. * ஈக்வேடர் எனப்படும் பூமத்திய ரேகைக்குப் பக்கவில் இருக்கும் பிரதேசங்கள் வெப்பம் மிகுந்த

---

* Equator

தாக அமைந்துள்ளன. பந்து வடிவாய் அமைந்த உலகத்திற்கு இரண்டு துருவங்கள் இருக்க வேண்டு மன்றோ? இவையே *தென் துருவம் என்றும் †வட துருவம் என்றும் குறிக்கப்படுகின்றன. பூமத்ய ரேகையிலிருந்து துருவங்களை நோக்கி அமைந்த பிர தேசங்கள் வெப்பம் மாறுபட்டுக் குளிர்ச்சி பொருந் தியனவாக அமைந்துள்ளன. துருவ வட்டங்களை நெருங்க நெருங்க வெப்ப நிலை பெரிதும் மாறுபடு கின்றது. ஆங்கு அமைந்திருக்கும் ஆழியும் பனிப் பாறைப் பரவையாக காணப்படுகிறது.

**துருவப் பிரதேசம்**

துருவ வட்டங்களில் மிகுந்த குளிர் நிறைந்துள் ளது; ஆங்குச் செல்லவும் முடியாது எனக் கூறப்பட் டது. குளிர் நிறைந்த இந் நிலப் பிரதேசத்தையும் கடற் பிரதேசத்தையும் பார்வையிட வேண்டும்; ஆங்குள்ள புதுமைகளைக் காணவேண்டும் எனவும் விழைந்தது அறிஞர் உள்ளம். 'ஆங்குப் பொருள் செறிந்திருக்க வில்லை, பயிர் செழித்திருக்கவில்லை. விலங்குகள் வாழ்ந்திருக்க வில்லை; விநோதப் பறவை கள் நிலவியிருக்க வில்லை' எனக் கூறப்படுவன வற்றையும் அவர்கள் நன்கு அறிவர். அவ்வாறிருப் பினும் அவ்விதப் பனிப் பாலையைக் காண விழை வதேன் எனின், அதுவே மனிதனின் இயற்கை காணும் அவாவினால் உந்தப்பட்ட சீரிய முயற்சியே யாகும். உலகில் பல பரந்த பாகங்களையும் பலர் கண்டு மீண்டு விட்டனர். இந்தத் துருவப் பிர தேசங்களைக் காண எவரும் முற்பட்டிலர். இருப்பி னும் ஏறத்தாழ மூந்நூறு ஆண்டுகட்கு முன்னர் சிலர் இம் முயற்சியில் ஈடுபடத் தொடங்கினர். ஆயினும் பற்பல வசதிக் குறைகளினால் அவர்கள்

* South Pole † North Pole

ஆங்கு சென்றடைந்திலர். ஆனல் *நார்வே தேசத்தைச் சேர்ந்த †நான்சென் என்னும் வீரர் ‡துருவப் பிரதேசத்தைச் சார்ந்த §கிரீன்லாந்து என்னும் தீவை ஆராய முயற்சித்தார். இம் முயற்சியிலேயே வட துருவம் சேரும் முயற்சிக்கும் அடிகோல யத்தனித்தார்.

நான்சென் — நான்சென் இதற்கு முன் பல தடவைகள் கிரீன்லாந்துக் கடல்களில் பிரயாணம் செய்து அநுபவம் பெற்றவர். ஆங்குள்ள அமைப்புக்களில் நன்கு அறிமுகப்பட்டவர். அவர் தமக்குத் துணையாக ஐவரைச் சேர்த்து அவர்களுக்குத் தேவையான இன்றியமையாத பல பயிற்சிகளையும் அளித்தார். மேலும் பிரயாணத்திற்கு வேண்டிய சாதனங்களையும், கருவிகளையும் ஆயத்தம் செய்யத் தொடங்கினர்.

வழுக்கு வண்டி — ஆங்குப் பிரயாணம் செய்வதானல் வண்டியிலோ, குதிரைகளிலோ செல்ல இயலாது. பனி உறைந்த பரப்பில் சக்கரங்கள் உள்ள வண்டிகளைச் செலுத்த முடியாது. ஆனதால் இதற்கென சக்கரஙகளே இலலாத வண்டிகளை அமைக்க வேணடுவதாயிற்று. சம மட்டமான நீண்ட பலகைகளைச் சக்கரங்களாக அமைத்து வழுக்கு வண்டிகளாகச் செய்து கொண்டனர். தரையில் கால்களை ஊன்றி நடத்தலும் இயலாது. அவ்வாறு நடந்தால் கால்கள் பனியில் பதிந்துவிடும். பதிந்த காலை வெளியில் எடுப்பதே கடினமாகிவிடும். ஆனதால் கால்களுக்கும் இது போலவே நீண்ட பலகைகளைப் பொருததிக்கொளள வேண்டும்; அப் பலகைகளைத் தரையில் தேய்த்துத் தேய்த்து, வழுக்கிச் செல்ல

* Norway † Nansen ‡ Polar Regions § Greenland

வேண்டும். இவ் வழுக்குச் சோடுகளை அணிந்து கொண்டு நடப்பது அரிய செயல். நான்செனும் அவரது துணைவர்களும் இவ்வாறு செல்லுவதில் பயிற்சி மிக்கவர்கள்.

இவ்விதப் பிரயாணக் கருவிகளுடன் தேவையுள்ள உணவுப் பொருள்களையும் சித்தம் செய்து கொண்டனர். பல நாட்களிருந்தாலும் கெடாதவாறு உணவுகளைப் பக்குவப்படுத்திக் காற்றுப் புகாத டப்பிகளில் அடைத்துச் சென்றனர். 1888-ம் ஆண்டு மே மாதம் நான்சென் தம் துணைவருடன் நார்வே தேசத்தைவிட்டுப் புறப்பட்டனர். பல கப்பல்களில் பிரயாணம் செய்தபின் கிரீன்லாந்துக் கரை தென்பட்டது. ஆனாலும் கரையோரம் கப்பலைக் கொண்டு செலுத்த முடியவில்லை. கடல் ஆழம் குறைந்தும், பாறைகள் நிறைந்தும், நீர்ப் பரப்பு இறுகியும், பனி உறைந்தும் இருந்ததால் கரைக்கு வெகு தூரத்திற்கு அப்பாலேயே கப்பலை நிறுத்திக் கீழே இறங்க வேண்டியதாயிற்று. கப்பலும் இவர்களை இறக்கிவிட்டுத் தன் வழிச் சென்றது.

கரை சேர்தல்

திக்குத் திசை யறியாத நடுக் காட்டில் விட்டுச் சென்றது போல் அக் கப்பல் அவர்களை நடுக்கடல் என்று சொல்லப்படும் தன்மை வாய்ந்த அந்த விடத்தில் விட்டுச் சென்றது. தமது நாட்டவரின் தொடர்பு அற்று, தம்விதி கொண்டு செலுத்தும் வழியில் பிரயாணம் தொடங்கலுற்றார் நான்சென். தாம் இறங்கிய இடம் கடலென்றும், தரை யென்றும், நீர்ப்பரப்பென்றும் அறிந்துகொள்வது கடினமாயிற்று. இத்தகைய பிரதேசத்தின் தன்மையை

வழி கடத்தல்

முன்னமேயே நன்கு உணர்ந்திருந்த நான்சென், அந்தந்த இடத்திற்குத் தக்கவாறு வழி செய்து சென்றார். நீர்ப்பரப்பு இருக்கும் இடங்களில் சிறு படகுகளைச் செலுத்தினர். பனி வழுக்கும் பிரதேசங்களில் வழுக்கு வண்டிகளையும் வழுக்குச் சோடுகளையும் உபயோகித்தார். 'வண்டி ஓடத்திலும், ஓடம் வண்டியிலும் ஏற்றப்படும்' என்பார்கள் அல்லவா? வழுக்கு வண்டிகளைப் படகுகளிலும், படகுகளை வழுக்கு வண்டிகளிலும் ஏற்றி இடத்திற்குத் தகுந்தாற் போல் வழி கடந்தனர். ஒவ்வொரு சமயம் நீர்ப்பரப்பு எனக் கருதி படகில் செல்லுவர். ஆனல் அத் தண்ணீர் உடனே உறையத் தொடங்கும். உறைந்த பனியில் படகு பதிந்துவிடுமோ எனத் தோற்றும். இவ்வித சமயங்களில் நான்சென் சிறிதும் தாமதியாது படகை வலித்து ஒதுக்கிப் பனிப் பாறையில் அதனைத் தள்ளிவிடுவர்; அது வழுக்கலுற்று ஓடும். இதனைக் காண்பாருக்கு இது வேடிக்கை விளைவிப்பினும், இது எத்துணை அபாயத்துக்குள்ளானது என்பது நினைத்தால் நெஞ்சமும் பனி போல் இறுகும். சிறு நீர்ப் பரப்பு போல் தோற்றும் இடம் போகப் போக முழுக் கடலாகவே தோற்றமளிக்கும். ஆங்கு அச் சிறு படகு சிற்றலையால் சிதறுண்டு அலைவுறும். அவர்கள் கொந்தளிக்கும் நீரிலும் தத்தளித்து செல்லுவர். சிற்சில சமயம் இரவு நேரமும் தோன்றி விடும். வீரர்கள் தூக்கத்திலும் ஆழ்ந்துவிடுவர். நீரோட்டம் செல்லும் பாதையில், படகு தானகவே தட்டி நின்றும், தத்தளித்து மிதந்தும் சென்று கொண்டிருக்கும்.

நான்சென், கரையை அடைய வேண்டிய பிரயாணமே இத்தகைய கடுமையான தொடக்கத்தைக் கொண்டதாக அமைந்தது. மிதந்தும், பாய்ந்

தும், வழுக்கியும், பனியைப் பிளந்தும் பலவாறு முயன்று கரைதனை அடைந்தனர். கடலும், தரையும், ஒரே பனிப் பாறையாக அமைந்துள்ள இடத்தில் கரையென்று தனியாக ஒன்றும் உளதோ!

எஸ்கிமோ கிராமம்

கரையை அடைந்ததும் அனைவரும் அளவற்ற மகிழ்ச்சி கொண்டனர். வடக்குத் திசையில் உள் நோக்கிச் சென்றனர். அப் பரந்த பனிவெளியில் எவ்விதமான புல் பூண்டுகளையும், உயிர் வாழ் பிராணிகளையும், மக்களையும் கண்டிலர். இவ்விதப் பனிப் பாலையில் சென்று கொண்டிருக்குங்கால் அதிசயிக்கத் தக்கவாறு ஒரு சிறு கிராமம் இவர் முன் தோன்றுவதாயிற்று. அது *எஸ்கிமோ என அழைக்கப்படும் மக்களின் உறைவிடமாகும். அவர்கள் மிகவும் குறைந்த உயரம் உள்ளவர்கள். அவர்கள் வசிக்கும் உறையுள் மிகவும் குறைந்த உயரம் உடையவை. அவை ஆங்கு வாழும் மிருகங்களின் மேல் தோலினால் வேயப்பட்டவை. அவற்றின் கிட்ட நெருங்கும் பொழுதே நாற்றம் வீசியது. தமது உறைவிடத்தை நாடி வரும் வீரர்களைக் கண்டு எஸ்கிமோக்கள் பிரமிப்படைந்தனர். உலகில் இவ்வளவு உயரமான மக்களும் உளரோ! என அவர்கள் ஆச்சரியம் அடைந்தனர். அவர்கள், வீரர்களை உற்று உற்று நோக்கினர்; தலை நிமிர்ந்து நின்று அவர்களது முகத்தை ஏறிட்டுப் பார்த்தனர். எஸ்கிமோக்கள் வீரர்களை மிகவும் உயர்ந்த மனிதர்களாகக் கொண்டனர். புன்னகை புரிந்து வீரர்களை வரவேற்றார்கள். நான்செனுடன் இவர்கள் ஏதேதோ பேச முயன்றனர்; நிமிர்ந்து நின்று உரக்கக் கத்தினர். அவர்

---

* Eskimo

கள் கத்தியது வீரரின் செவிகளில்தான் தாக்கி
யிருக்குமோ, யாதோ? அறியோம். ஒருவருக்கு
ஒருவர் பேசுவது அறியாது விழித்தனர்! ஊண்
கொடுத்து உபசரிக்க அவர்களிடம் உண்டியில்லை;
உறைவிடங் கொடுத்து உபசரிக்க அவர்கள் உறை
யுள் போதுமானதாக இருக்கவில்லை. இருப்பினும்
புன் சிரிப்பினாலேயே உபசரித்து அவர்கள் நின்ற
னர். இவ்வித மக்களும் கிராமங்களும்தான் அந்
நிலப்பரப்பில நிறைந்துள்ளன போலும் என நான்
செனும் துணைவர்களும் அறிந்து நகை
கொண்டனர்.

இந்த விநோதமான கிராமத்தைவிட்டு உள்
நாடு செல்லத் தொடங்கினர். இக் கிராமத்தைத்
தாண்டி வெகு தூரம் உள் நோக்கிச் சென்றும்
இதுபோன்ற உறையுளோ அல்லது
இவர் போன்ற மக்களோ எங்கும் தென்
படவேயில்லை. பனி படர்ந்த தரையில்
தமது வழி கடக்கும் சாதனங்களால் வழி கடந்து
கொண்டிருக்கும்பொழுது ஒரு சமயம் தரை திடீ
ரென்று சரிவது போன்றும், ஓடுவது போன்றும்
உணர்ச்சி தோன்றியது. ஆம்; அத் தரை
உண்மையிலேயே அப்பொழுது ஓடிக்கொண்டு
தானிருந்தது! பனிப் பாறையே ஆங்கு நிலமாக
அமைந்தது போலும். அடிப் பகுதியில் பனி இளகி
பனிப் பாறையாகவுள்ள நிலம் கடலை நோக்கிச்
சென்று கொண்டிருந்தது. இஃது இங்கு அமைந்த
நிலத்தின் இயல்பு போலும்.

ஓடும் தரை

தரை நகர்ந்து செல்லுவதையறிந்த வீரர்கள்
சிறிது அச்சம் கொண்டனர். சிறிது ஆராயத்
தொடங்கினர். அடிப் பகுதியில் உள்ள நீர் உறை
யும்போது, இந்தத் தரையும் அதிற்பதிந்து அசை

மலை பெயரும் நிலத்தொடர்

யாது நின்றது. இவ்வாறு நிலையாக நின்றும், நீராக ஓடியும் சென்று கொண்டிருந்தது அந் நிலப் பகுதி! நிலப்பகுதியாகத் தோன்றிய இடம், சில சமயம் பனிக் கட்டி ஆறாக ஓடத் தொடங்கியது. சமப் பரப்பாக இருந்த இடத்தை நோக்கிப் பெரிய மலைத் தொடர்கள் ஓடிவருவது போல் தோற்றமளித்தன. நிலம்தான் ஓடுகிறதெனின், கண்களுக்குப் புலனாகாதிருந்த மலைகளும் நிலை பெயர்ந்து ஓடி வருகின்றனவே! என வீரர்கள் திடுக்கிட்டனர். இவை மலைத் தொடர்கள் அல்ல; பெரும் பனிப் பாறைகளே பனி மலைக் குன்றுகளாகி, கீழுள்ள நீரோட்டத்தால் அவை நிலைபெயர்ந்து வந்துகொண்டிருந்தன. அம்மலைகள் தம் மேல் வந்து தாக்கிவிடும் என அஞ்சுவர் வீரர். மிகவும் நெருங்கி வந்துவிடும் அம்மலைகள்; தமது வாழ்நாள் முடிவுற்றது என எண்ணுவர் வீரர்கள்; தமது கண்களை இறுக மூடிக்கொண்டு இறைவனை வழிபடுவர். சிறிது நேரம் சென்று கண் திறந்து பார்க்குங்கால் மலைகள் இருந்த இடமே தெரியாது. வந்த வழி திரும்பிச் சென்றுகொண்டிருக்கும். இவர்கள் வழிபாட்டின் விளைவுபோலும்! இவ்விதக் காட்சிகள் அடிக்கடி தோன்றித் தோன்றி மறையும். தாம் கடலில்தான் இருக்கிறோமோ அல்லது கரையில்தானிருக்கிறோமோ? என ஐயங்கொள்ளும்படி இக் காட்சிகள் இயங்கிக் கொண்டிருந்தன.

இடைவெளிகள் ஒன்று சேர்ந்து ஒரே நிலப் பரப்பாகும் சில சமயம். அதில் நம்பிக்கைகொண்டு அதைக் கடக்க முயன்றால் திரும்பவும் அது நீர் கொண்ட இடைவெளியாக மாறினும் மாறும். அதனைக் கடப்பது பெரிதும் ஆபத்தானது. இருந்தாலும் தேர்ச்சிபெற்ற நான்சென் சமய சந்தர்ப்

பங்கள் அறிந்து தக்கவாறு வழி கடந்து சென்றார். பனிப் பாறைகளுக்கும் நீரோட்டங்களுக்கும் தப்பிச் சென்று நிலப் பகுதியின் கடும் பயணம் நடுப் பாகத்தையும் அடைந்துவிட்டனர். இங்குற்ற நிலம் ஓடுவதாக இல்லை; நிலையாகவே நின்றது. ஆனால் வழி கடப்பது மட்டும் மிகுதியும் துன்பம் தருவதாக இருந்தது. மலைகளின் மேலும், கரடு முரடான கற்பாறைகளின் மீதும் நடப்பதுபோன்ற துன்பத்தையளித்தது. மேடு பள்ளங்கள் மிகுதியும் நிறைந்திருந்தன; கூர்மையான பனிப் பாறைகளும் பரந்திருந்தன; பனிச் சேறு நெகிழ்ந்த பகுதிகளும் மிகுந்திருந்தன. மலைகளைக் கடப்பதுபோன்று வெகு உயரம் ஏறவும், பின் திடீரெனப் பள்ளங்களில் இறங்கவும் நேரிட்டது. செங்குத்தான பனிப் பாறைகளின் மீதும் கீழ் இறங்க வேண்டியதாயிற்று. வழுக்குச் சோடுகளை இழுத்தும் வழி நடப்பது கடிதாயிற்று. உறுதியான பனித் தரையில் தம் கைவசம் கொண்டு சென்ற பெரிய கம்பங்களை ஊன்றி, அவற்றில் வலிய கயிறுகளைப் பிணைத்து, அவற்றைக் கீழ் நோக்கித் தொங்க விட்டு, அவற்றின் வழியே கீழே இறங்கினர். கயிறு மேற்புறம் உராயும்பொழுது அறுந்து விழுந்தாலும் விழுந்துவிடும். அவ்வாறு விழுந்துவிடின் கீழிருக்கும் வீரன் எங்குப் போய்ச் சேருவான் என்று கூறவும் வேண்டியதில்லை. இம் முறையில் அனைவரும் வெற்றி கொண்டனர். சிலர் பல தொந்திரவுக் காளாகினரேனும், எவரும் இதனால் உயிரிழக்கவில்லை. கயிறு பிணைத்து இறங்க முடியாத இடங்களில், வீரர்கள் தமது வீரத்தையே கொம்பாக நாட்டி, தமது ஊக்கத்தையே கயிறாக அமைத்து, உயிரையே பணயமாகப் பிணைத்து, பனிப் பாறையில் மார்பையும் உடலையும் அடைக்

கலமாக அளித்து ஊசலாடும் உயிருடன் ஊர்ந்து சென்றனர். இவ்வளவு அபாயத்திலும் இடுக்கண்களிலும் உயிரையும் வெறுத்து அவர்கள் சென்று எதைக் காணப் போகின்றார்கள்; எதனைக் கொணரப் போகின்றார்கள்? இயற்கைக்கு அடிமையாகாது அதனை வெற்றி கொள்ள முயற்சிக்க வேண்டும்; மானிடனால் முடிந்த வரையில் மாண்புறு செயல்களைப் புரிய வேண்டும்; காணாதனவற்றைக் காண வேண்டும்! என்னும் வீர உணர்ச்சியும் புதுமை காணும் அவாவுமே அவர்களை அவ்வாறு ஊக்கிச் செலுத்துகின்றன.

**இரவில் பிரயாணம்**

பல மாதங்களும் இவ்வாறு கடிதில் வழி நடந்து உள் நாட்டில் வெகு தூரம் முன்னேறிவிட்டனர். அது சமயம் சிறிது சூரிய வெப்பமும் பகலில் உறைக்கத் தொடங்கியது. பகலவன் முன் பனிக்கட்டி நிற்குமோ? பனித் தடங்கள் உருகி, சதுப்பு நிலமாக மாறின. இச் சகதியில் கால் ஊன்றி நடக்கவோ, வழுக்கு வண்டியில் செல்லவோ, வழுக்குச் சோடு அணிந்து இழைத்து நடக்கவோ இயலாது. ஆனதால் பகலில் வழி நடப்பது அரிதாயிற்று. பகல் நேரம் கழிந்து வெப்பங் குறையும் போது சகதிகளும் இறுகத் தொடங்கின. இவ்வியல்பை நன்கறிந்த நான்சென், பகலில் தக்க உறைவிடங்களை அமைத்துத் தங்கியிருந்து, மாலை நேரங்களிலும் இரவு நேரங்களிலும் வழி நடக்கத் துவக்கினர். இவ்வாறு வழி நடந்தும் சிறிது சிறிதாக முன்னேறினர்.

பல மாதங்களாக இவர்கள் எவ்விதமான மக்களையோ, விலங்குகளையோ, பறவைகளையோ ஆகிய எவற்றையுமே காண முடியவில்லை. மனிதப்

பிறவியென்று தம்மைத் தாமே ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்ள வேண்டியதாயிற்று! வேறு எதுவும் இங்கு உயிர் வாழ்வது இல்லை போலும்.

உறக்கப் பைகள்

மாறுபட்ட காட்சிகள் எதையும் அவர்கள் கண்டிலர். அதே பனிப் படலம், அதே பனிப் பாறை. எஸ்கிமோ கிராமத்தை விட்டகன்ற பின் வேறு எதையும் அவர்கள் காணவில்லை. குளிர் தவிர வெப்பத்தை உணரவில்லை. உறைவிடமாகக் கூடாரம் இட்டுத் தங்கினாலும் போர்வைகளை மட்டும் போர்த்திக் கொண்டு உறங்கவும் இயலவில்லை. உறங்குவதற்கெனப் பிரத்யேகமாய் அமைக்கப் பெற்ற தோல் பையினுட் புகுந்துகொண்டு, பையின் வாய்ப் பாகத்தை இறுகக் கட்டிக் கொண்டார்கள். பண்டம் வைக்கப்பட்ட மூட்டைகளைப் போன்று பைகளில் புகுந்துகொண்டு உறங்கி உருண்டனர். இரவுப் பொழுதில் இவ்வாறு உறங்கியும், பகற் பொழுதில் வழி நடந்தும் காலங் கழித்தனர். உட் செல்லச் செல்லக் குடி தண்ணீர் கூடக் கிடைக்கவில்லை. பனிக் கட்டியைக் குப்பியில் போட்டுத் தேகத்தின்மீது வைத்துப் பலமணி நேரம் கழித்துத் தேக வெப்பத்தால் உருகும் தண்ணீரையே பருகுவாராயினர்.

எதிர்ப்பட்ட ஏரி

போராற்றுக்கும் முடிவிடம் ஒன்று உண்டல்லவோ? துன்பம் தொடர்ந்து நிகழ்ந்துகொண்டே இருக்குமோ? முயற்சி மெய் வருத்தக் கூலி தரும் என்பது மெய்மொழியன்றோ! எவரும் எதிர்பாரா வண்ணம் அவர்கள் எதிரில் தெளிந்த நீர் ஏரி யொன்று தென்பட்டுத் திகழ்ந்தது. அவ்வேரி கண்களுக்குத் தெற்றெனத் தென்படும் கூடத் தாம் இது வரையில் பெற்றுவந்த அனுபவங்களால் அது

ஏரியாக இருக்கும் என்ற நம்பிக்கைகூட அவர்கள் கொள்ளவில்லை. ஆவியாக இருக்குமோ, ஏதும் பிரமையான தோற்றமா யிருக்குமோ, தமது மனத்தில் எழுந்த எண்ணங்களின் பிரதிபிம்பமாக இருக்குமோ, நீர் வேட்கை கொண்ட தமது உட்கருத்தின் வெளித் தோற்றமாக இருக்குமோ அந்நீர் நிலை என ஐயுற்றனர். கிட்ட நெருங்கித் தொட்டுப் பார்த்த பின்பே அது உண்மையிலேயே ஆங்கு நிலவியிருக்கும் தெளிந்த நீருடைய பெரிய ஏரி எனக் கண்டனர். நீரைச் சுவைத்துப் பார்த்தனர். கடும் பாலையில் நடுப் பகற் பொழுதில் வறட்சி கொண்ட தொண்டைக்கு, குளிர்ந்த இனிப்பான இளநீர் கிட்டியதுபோன்று உணர்ச்சி அளித்தது அத் தெளிந்த நீர். அனைவரும் மனமாரப் பருகினர்; தாக வேட்கை தணிந்தனர். பலநாட் துன்பங்களையும் இந்த ஏரி நீர் நொடியில் போக்கிவிட்டதெனின் அவர்கள் தண்ணீருக்குத் தவித்து நின்ற தாக வேட்கையின் தன்மையைத் தெள்ளிதின் புலப்படுத்துவது யாங்ஙனம்? தண்ணீரை வேண்டியமட்டும் அங்கேயே குடித்துத் திருப்தியுற வேண்டியதுதான் அப் பிரதேசத்தின் இயல்பு. நீரெடுத்துச் செல்வது இயலாத செயலாகும். எடுத்துச் செல்லும் நீர் சிறிது நேரத்தில் உறைந்துவிடுமே!

கரை கிட்டியது

இவ்வளவு தூரம், இவ்வளவு மாதங்கள் வழி நடந்தும் கிரீன்லாந்தின் மறு கரையைக் கிட்டினாரில்லை. இருப்பினும் உறுதி தளராது, உற்சாகம் குன்றாது தமது வழியைத் தொடர்ந்து சென்றனர். ஒரு முழு நாளிலும் நான்கு அல்லது ஐந்து மைல் தூரங்கூட அவர்களால் நடந்துசெல்ல முடியவில்லை — அவ்வளவு கடினமான பாதை. இவ்வாறு

பல நாட்கள் சென்ற பின்பும் பனிப் பாறைக்குப் பின்னால் பெரிய மலைக் குன்றுகள் இருப்பது புலனாயிற்று. ஏதும் நகரத்தைக் கிட்டுகிறோமோ என்ற எண்ணம் வீரர்க்குத் தோன்றியது. பின்னும் சின்னாட் பயணத்திற்குப் பிறகு அவர்கள் அம் மலைக் குன்றுகளை அடைந்தனர். அம் மலைத் தொடரையும் தாண்டியபின் அவர்கள் கண்ட காட்சியால் தம்மையும் மறந்து நின்றனர். ஆங்கு ஓர் ஏரியும் அதன் கரையில் ஒரு நகரமும், நகரத்திற்கு அப்பால் கடல் வெளியும் தென்பட்டன. கடைசியாக, கிரீன்லாந்தின் மறு கரையை அடைந்துவிட்டோம்; கிரீன்லாந்தின் கிழக்குக் கரையில் தொடங்கி மேற்குக் கரை வரையில் உட் பிரதேசத்தில் பிரயாணம் செய்து மறு கரையையும் கிட்டிவிட்டோம் என்று ஆனந்த ஆரவாரம் செய்தனர்; கூச்சலிட்டனர்; மிகுந்த மன மகிழ்ச்சியினைப் பலவாறும் புலப்படுத்தினர். *காட்தாப் என்ற அந் நகரையும் அணுகினர். ஆங்குள்ளார் இவர்களை அன்புடன் வரவேற்க ஆங்கு இனிது உறைந்திருந்தனர். சின்னாட்கள் அங்குத் தங்கிப் பின்னர் தாம் வந்த வழியே திரும்பிச் சென்று கப்பலையடைந்து தமது தாய் நாடு சேர்ந்தனர்.

கிரீன்லாந்தில் உள் நாட்டுப் பயணம் செய்து மீண்ட நான்சென், அதே போல முயன்று வட துருவத்தையும் அடையலாம் என உறுதி கொண்டார். வட துருவத்தைச் சூழ்ந்திருக்கும் †ஆர்க்டிக் பெருங் கடலில் அவர் பிரயாணம் செய்ததில், சிற்சில இடங்களில் நீரோட்டம் மிக விரைவாகவும் ஒரே ஒழுங்காகவும் செல்லுவதைக் கவனித்திருந்

---

* Godthaab † Arctic Ocean

தார். இவ்வித நீரோட்டங்களின் மூலம் கலத்தைச் செலுத்திச் சென்றால் துருவத்தையும் அடையலாம் என எண்ணங் கொண்டார். கிரீன் லாந்தில் வெற்றி கண்டு மீண்ட நான்செனிடம் நார்வே மக்கள் உறுதியான நம்பகம் கொண்டிருந்தனர். அவர் துருவம் காண மூற்படும் செய்தியறியவும், அனைவரும் அவருக்கு உதவி புரியத் தலைப்பட்டனர். அரசினரும் பெருந் தொகையளித்து உதவினர்.

துருவங் காணும் நாட்டம்

நான்சென், தாம் மேற்கொள்ளும் பயணத்திற்கு உறுதி வாய்ந்த கலமொன்று தயாரித்து ஐந்து ஆண்டுகளுக்கு மேலும் போதுமானதாக உணவுப் பொருள்களையும் சேமித்துக் கொண்டார். தமக்குத் துணையாகப் பன்னிரு வீரரைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சியளித்தார். பல இன்றியமையாத புதுமைப் பொருள்களையும் சேகரித்துக் கொண்டிருந்தார். இருள்கொண்ட இடங்களில் உபயோகித்துக் கொள்ளுமாறு மின்சாரம் உற்பத்தி செய்யும் *டைனமோ ஒன்றும் அமைத்துக் கொண்டனர். இவ்வித ஆய்த்தங்களுடன் நார்வேக் கரையை விட்டு 1893-ம் ஆண்டு ஜூன் மாதம் நான்சென் தம் துணைவர்களுடன் துருவம் நோக்கிப் பிரயாணத்தைத் துவக்கினர்.

சேமிப்பு

நான்செனின் கலம் ஆர்க்டிக் கடலில் தட்டுத் தடங்கலின்றிச் சென்று கொண்டிருந்தது. வழியே சில தீவுகளில் தங்கிச் சென்றனர். ஒரு தீவில் வண்டிகளை இழுக்கவும் பனியில் நடக்கவும் ஆங்கு

---

* Dynamo

வாழும் நாய்களைப் பயன்படுத்துவதைக் கண்டு, தாமும் பல நாய்களை வாங்கிக் கப்பலில் ஏற்றிக் கொண்டார். அத் தீவுகள் * துந்திரப் பிரதேசத்தைச் சார்ந்தவை. கால நிலையும் அது போழ்து கோடையாக இருந்தமையின் சாதாரணமான சில செடி கொடிகள் முளைத்து வளர்ந்து மிளிர்ந்தன. பற்பல வர்ணங்களில் பெரிதும் சிறிதுமான பல மலர்களும் விளங்கின. "பொன் மலர் நாற்ற முடைத்து" என்பது போல் அவ்வண்ண மலர்கள் யாவும் நறுமணம் பெற்றிருந்தால் அந் நறுமணம் வான வெளியையும் துளைத்துச் செல்லுமன்றோ! கானகம் வாழ் கொடு விலங்குகள் போல் அவை அடர்ந்து படர்ந்து விளங்கின.

துந்திரப் பிரதேசம்

இவ்வாறு பல இடங்களிலும் தங்கிச் சென்று †காராக்கடலையும் அடைந்தனர். ஆங்குத் திகழ்ந்த சில தீவுகளின் கரையோரங்களில் ‡ரெயின் டியர் எனப்படும் ஒருவகை மானினம் கூட்டங் கூட்டமாய் ஓடி யாடித் திரிவதைக் கண்ணுற்றனர். அவற்றின் கால்கள் நீண்டு மெல்லியனவாக இருப்பினும் அவை மணலிலோ, பனிச் சகதியிலோ பதியாமல் செல்லுவதைக் கவனித்தார். இம் மரை யினங்களில் சிலவற்றையும் கொண்டு செல்ல எண்ணங்கொண்டு, தமது கப்பலை நிறுத்திக் கீழிவர்ந்து அவற்றைப் பிடிக்க முயன்றார். சுயேச்சையாக எவர் கண்களிலும் தென்படாமல் ஓடியாடி உயிர் வாழ்ந்து வந்த அம் மருண்ட பார்வையுள்ள உழைக் கூட்டங்கள் மிடுக்குற்று விரைவாக ஓடத் தொடங்கின. வளைந்து வளைந்து கைப்பிடியில் அகப்படா

மானினமும் மானிடரும்

---

* Tundras † Kara Sea ‡ Rein Deer

மல் மறைந்தன மரையினம். நான்சென் எவ்வளவு முயன்றும் அவற்றில் ஒன்றைக்கூட உயிருடன் பிடிக்க முடியவில்லை! மானிட்னிடம் அடிமைப்பட விரும்பவில்லை போலும் மானினம்! சிலவற்றைச் சுட்டு வீழ்த்தி அவை உணவுக்காகும் என எடுத்துச் சென்றனர் வீரர்கள்!

விநோத விலங்கு

கடலிற் செல்லுங்கால் கடல் வாழ் மிருகங்களான *வால்ரஸ் எனப்படும் பிராணிகள் எதிர்ப்பட்டன. இவை நீரினுள் கூட்டங் கூட்டமாக வாழும் இயல்புடையவை. தமது விரோதிகளைக் கண்ணுற்றால் பல திசைகளிலும் பிரிந்து சென்று, அதன் பின் விரோதிகளைச் சுற்றி வட்டமிட்டு வந்து நின்றுவிடும். அந்த வால்ரஸ் கோட்டையினின்று அவ் விரோதிகள் தப்பிச் செல்லுவது கடினம். இவை கலத்தையும் வந்து சூழ்ந்து கொண்டன. நான்செனும் வீரர்களும் அவற்றுடன் போராட வேண்டியதாயிற்று. கோல்களும் ஈட்டிகளும் பயன்படுவனவாக இல்லை. வெடிச் சப்தமிட்டு அவற்றை வெருட்டினர்.

பனியில் படிந்த கப்பல்

கலம் சென்றுகொண்டிருக்கும் கடல் நீர், தன்மையில் மாறுபடலாயிற்று. தண்ணீர் இறுகலான குழம்புபோல் அமைந்திருந்தது. கப்பல் அதிற் செல்லுவது இயலாததாகத் தோன்றியது. சற்று நேரத்தில் கடல் நீர் உறைந்து பாறையாகவே, கப்பலும் இறுகிய பனிக்கட்டியில் அசையாதவாறு இணைந்து நின்றது. பனி உறைந்த கடலில் அகப்பட்டுக்கொண்ட கப்பலை விடுவிப்பது கடினமாகிவிட்டது. வீரர்களும் வெளிவர முடிய

* Walrus

வில்லை. கீழிறங்கினால் கடலின் தன்மை எவ்வா றிருக்குமோ என்ற ஐயத்தாலேயே அவர்கள் பல நாட்கள் கப்பலிலேயே வாளாயிருக்க வேண்டிய தாயிற்று. கப்பலின் உட்புறம் செப்பஞ்செய்ய வேண்டுவனவற்றையும் பிற ஆயத்தங்களையும் செய்துகொண்டு பல நாட்கள் அப்படியே தங்கி யிருந்தனர்.

**பனிக் குன்றுகள்**

பின்பொரு தினம், பனி சிறிது நெகிழ்வது போல் தோற்றியது; பின் சிறிது சிறிதாக உருகி நீராகிவிட்டது. அதுபோழ்து பல திசைகளினின் றும் பனிக் குன்றுகள் அலைகளைப் போலக் கிளம்பிக் கப்பலின் பக்க வில் வருவதாயின. அவை ஒன் றுடன் ஒன்று மோதும்போது, பேரிடியும் மின்னல் போல் அஞ்சி ஓடி யொளியத்தக்க பேரொலியை எழுப்பின. ஆனாலும் அவற்றால் கப்பலுக்கு எவ் விதச் சேதமுமேற்படவில்லை. கலம் மட்டும் ஒரே நிலையாக நில்லாது அக் கடலில் பெரிதும் தத்தளித் தது. வீரர்களின் மனம் கப்பலைவிட மிகவும் தத்தளித்தது.

**கண்கொள்ளாக் காட்சி**

இன்னல்களிடையே இன்பம் தோன்றுவதும் இயற்கையன்றோ! இவர்கள் இவ்வாறு தத்தளித்து நிற்குங்கால் ஓர் அரும் பெரும் காட்சியைக் கண்ட னர். இதுவரை எவரும் கண்டு உணர்ந்தாத உண்மைக் காட்சி யைக் கண்ணாரக் கண்டனர். வர் ணிக்க முடியாத காட்சியை வானில் கண்டு மகிழ்ந்தனர். பல வர்ணக் கோடுகள் ஒன்றாக இணைந்து பின்னி நின்று முறுக்கேற்றிய வடம் போன்று தொடக்கமும் முடிவும் தெரியாது

தோற்றமளித்தது. அவ் வடத்தின் கீழும் மேலும் கட்டித் தொங்கவிட்ட பல கொடிகள் பறப்பது போன்ற தோற்றம் கண் கொள்ளாக் கவின் பெருங் காட்சியாக அமைந்திருந்தது. ஒரு சமயம் அது பொன் மயமாய் விளங்கும்; மறு நொடியில் அது பசு மஞ்சளாக மாறும்; அதன்பின் இரண்டும் கலந்த வண்ணத்தை வானிலே பரப்பும்; சிறிது சென்று பொன் தகட்டில் மரகதம் பதித்தாற் போல் இடையிடையே பசுமை கலந்து ஒளி வீசும்; உடனே அது மறைந்து வைரம், வைடூரியம், கோமேதகம் முதலிய பல வர்ணமுள்ள கற்களைப் போல் பிரகாசித்து வர்ணத்தை உதிர்க்கும். ஒரு நொடியில் வானவெளி ரோஜா நிறத்தை அடையும். உடனே அங்கு ரோஜாப் பந்தரில் முத்து மாரி பொழிவதுபோல் பல வெண் புள்ளிகள் பாய்ந்துவந்து மறையும். இஃது, இயற்கை வானில் விளைவிக்கும் வாண விளையாட்டுபோலும்! இஃதோர் இயற்கை அற்புதம் அன்று; ஏதேனும் ஒரு சமயம் தோன்றும் விநோத நிகழ்ச்சியேயாகும். இதுவே * வட் திசை விண்ணொளி எனப்படுவது. இதனைப் பார்த்த கண்களும் பூத்துப்போக மெய்ம் மறந்து இப் பேரொளிக் காட்சியைக் கண்டு மகிழ்ந் தனர் வீரர்கள். இக் காட்சி பல நாட்களுக்கும் இவர்கள் கண்களை விட்டகலவேயில்லை. காணுதற் கரிய இக் காட்சியைக் கண்டபின் தாம் இதற்கு முன் அடைந்த இன்னலை மறந்தனர்; உடல் வருத் தம் விடுத்தனர்; உற்சாகம் கொண்டனர். இனி மேலும் இதைவிட அற்புதங்களைக் காணப் போகின்றோம் என்னும் பேராசையும் கொண்ட னர் எனின் அவர்கள் கொண்ட ஆனந்தத்தை அளவிட முடியுமோ?

* Northern Light

பல நாட்கள் நிலையாக நின்ற கலம் இந் நிகழ்ச்சிக்குப் பின் மெல்ல மெல்ல நகரத் தொடங்கியது. கடலில் தம் மனம்போன போக்குப்படிச் செல்ல இயலாமல், நீர் போகும்போக்கில் போக

மலை மாரி வேண்டியதாயிற்று. சிறிது சிறிதாகத் துருவ வட்டத்தையும் நெருங்கி 80-வது பாகையையும் தாண்டிச் சென்றுவிட்டனர். தண்ணீர் உறைந்திருந்தபொழுது பல நாட்களும் பல மாதங்களும் தங்கியிருந்து, நீர் நெகிழ்ந்தபின் நீரோட்டம் செல்லும் வழியில் கலத்தைச் செலுத்திச் சென்றனர். சிற்சில சமயங்களில் பனியால் நெருக்குற்ற கலம் எங்கு நொறுங்கிப் பயனற்றுப் போகுமோ என்ற அச்சமும் ஐயமும் இடையிடையே எழுந்தன. பல சமயங்களில் வானம் நீல வான் என்பது பொய்த்துப் போகும்படி பனி நிறைந்த வெண் வானமாகத் தோற்றமளித்தது. நீர்ப் பரப்பில்தான் பனி மலைகள் மிதந்து வந்தன வென்றால் வானவெளியின்றும் பனிக்கட்டிகளும் பனிக் குன்றுகளும் திடீர் திடீரெனக் கீழே விழுந்தன. அவற்றை மலை மழையென்றும் கூறலாம் - அவ்வளவு பனி. நான்சென் கலத்துடன் கடலில் செல்வது அவ்வளவு எளிதாக அமையவில்லை.

கடும் பனி மாரிக் காலமும் தன்னியற்கைப்படி வந்தெய்தியது. பலதூரம் கடந்து இதுவரையில் 82-வது பாகையும் நெருங்கி விட்டனர். பருவ நிலையும் பனிமழையும் பொறுக்க இயலாததாகி விட்டது. இடையிடையே வெண்கரடிகளின் தொந்தரவும் மிகுந்துவிட்டது. நான்

நடந்து செல்லத் தீர்மானம்

சென்னும் துணைவர்களும் மிகுதியும் இன்னலிலாழ்ந்தனர். இப்பருவ காலத்தில் அவர்கள் உயிர் தப்பி

யிருந்ததே பெருத்த வீரச் செய்கையாகும். கப்பலும் பனிக் கடலில் மீள முடியாதவாறு பதிந்து விட்டது. இனியும் வடதுருவம் செல்லுவதென்றால் நடந்துதான் செல்ல வேண்டுமேயல்லாது கப்பலை எதிர்பார்ப்பதில் பயன் யாதுமில்லை என உணர்ந்து கொண்டார் நான்சென். கலமின்றி வழிகடக்க வேண்டிய சாதனங்களைத் தயாரிக்கத் தொடங்கினார். மெல்லிய கழிகளினால் உறுதியான தெப்பமொன்று அமைத்தார். வழுக்கு வண்டிகளையும், வழுக்குச் சோடுகளையும் நாய்களையும் ஆயத்தம் செய்தார். தம்முடன் வந்த வீரர்களிற் சிறந்தவரான ஜொஹான்சென் என்னும் வீரரை மட்டும் தம்முடன் அழைத்துக்கொண்டு ஏனையோரைக் கப்பலிலேயே தங்கி யிருக்கச் செய்து, புறப்பட்டுச் சென்றார்.

**வடதுருவம்**

வெப்பந் தரும் உடைகளும், காற்று பனி தாக்காதிருக்கும் மேற் போர்வைகளும் அணிந்து சென்றனர் வீரர்கள். கண்களைத் தவிர வேறு எந்த உறுப்பும் வெளியே தென்படவில்லை. உணவு பக்குவம் செய்யும் விசை யடுப்புச் சாதனமும், ஆங்காங்குத் தங்கிச் செல்லக் கூடாரமமைக்கும் சாதனங்களும் உடன் எடுத்துச் சென்றனர். மெல்ல மெல்ல வழுக்கி ஊர்ந்து பிரயாணம் செய்து வடதுருவம் நோக்கி வெகு தூரம் சென்றுவிட்டனர். 86-வது பாகையையும் தாண்டிவிட்டனர். அதற்கு மேல் ஜொஹான்செனால் தொடர்ந்து செல்ல இயலவில்லை. நான்சென் மட்டும் தனித்துச் செல்லத் தொடங்கினார். எவரும் இதுவரை கிட்டாத தூரம் சென்றும், அதற்கு மேலும் இனிச் செல்ல முடியாது எனத் திட்டமாகத் தெரிந்தும் நான்சென் வட துருவம் காணாது மீளுவதில்லை

எனத் திடங்கொண்டார். அவராலும் செல்ல முடியவில்லை தான். எப்படியாவது அடைந்துவிட மாட்டோமா என்றுதான் அவர் மேலும் முயன்று சென்றார். அதற்குமேல் சில மைல்கள் தூரம் சென்றபின் இனியும் செல்லுவது அரிது என்பது அறிந்து கொண்டார். திரும்ப வந்து தம் துணைவரைச் சேர்ந்து, இருவருமாகத் தாம் வந்த வழியே திரும்பலுற்றனர்.

திரும்புதல்

எவரும் கிட்டியிராத வெகு தூரம் வரையிற் சென்றிருந்தும் நான்சென் வடதுருவத்தை எட்டவில்லையே என்ற வருத்தம் மேலிட்டவராகவே தமது திரும்பும் பயணத்தைத் தொடங்கினர். வழியிலும் பல இடையூறுகளுக்காளாக வேண்டியிருந்தது. வெண் கரடிகள், வால்ரஸ் முதலிய மிருகங்கள் அடிக்கடி எதிர்ப்பட்டு இவர்களை விரட்டியடித்தன. சிலவற்றின் எதிர் நின்று போராடியும், சிலவற்றைச் சுட்டு வீழ்த்தியும் தப்பிச் சென்றனர். தாம் வந்த வழி யறிந்து செல்லுவதும் இயலவில்லை. பரந்த பனி வெளியில் பாதையும் புலப்படவில்லை. வெகு தூரம் திரும்பி வந்தும் தமது கலம் தென்படவேயில்லை.

கரடிக் கோலம்

தாம் வழிச்செல்லும் பாதையைத் தாமே அறியாது நான்சென் சென்று கொண்டிருந்தார். சிறிது தூரத்தில் இவர்களைக் காணலும் ஒரு குக்கல் குதித்துக் குதித்துக் குரைக்கலுற்றது. இவர்களை வேற்றவராகக் கொண்டதோ அல்லது இவர்களது தோற்றத்தைக் கண்டு, தனது விரோதியாகிய கரடிகள் என்று எண்ணியதோ யாம் அறியோம். ஏனெனில் இவர்கள் அப்பொழுது கரடிக் கோலமே கொண்

டிருந்தனர். நீண்டு வளர்ந்து சடை பிடித்துத் தொங்கிய தலை மயிர்கள், முகமே புலப்படாதபடி வளர்ந்து மூடியிருந்த முக உரோமங்கள், பனித் திவலை படிந்த மேலுடைகள் ஆகிய இவற்றினால் இந்த உடைகளுக்குள் மானிடன் ஒளிந்திருக்கிறான் என்று ஐயங்கொள்ள இடமேயில்லை. இவ்வுருவத்தை ஒரு விநோதப் பிராணியோ என்றே கருத வேண்டியிருந்தது.

வேற்று வீரர்

நாய் குரைத்ததைக் கேட்ட நான்சென் 'மனிதரில்லா இடத்தில் நாய் இருக்கப் பொருத்தம் இல்லையே; அருகில் யாரேனும் மக்கள் உறைந்திருப்பரோ' என எண்ணியவராய் சுணங்கன் குரைத்த திசை நோக்கிச் சென்றார். சிறிது தூரத்தில் ஒரு சிறு கூடாரம் தென்பட்டது. ஆங்குத் தம்மைப் போன்ற மனிதர் ஒருவர் உட்கார்ந்திருப்பது கண்டு நான்சென் திகைப்புற்றார். 'இப் பிரதேசத்திலும் நம் போன்ற மக்களா!' என ஆச்சரியம் கொண்டார். கிட்ட நெருங்கிப் பார்க்குங்கால் அவர் தமக்கு அறிமுகமான *ஜாக்சென் என்னும் தம் போன்ற ஒரு வீரரே என அறிந்துகொண்டார். கரடி உருவை ஒத்திருந்த இவர்கள் மனிதர்கள்தாம் என்று ஜாகசெனால் நம்ப முடியவில்லை. நான்சென் தமது மேலுடைகளைக் கழற்றி யெறிந்த பின்னரே ஜாக்சென் எழுந்தோடி வந்து அணைந்து கொண்டார்.

ஜாக்செனும் இது போன்ற பணியிலீடு பட்டவரே ஆவர். வீரர்கள் மூவரும் தாம் தாம் கண்டு வந்தவற்றைப் பற்றிக் களித்துப் பேசி

* Jackson

மகிழ்ந்தனர். சின்னாட்களில் ஜாக்செனை அழைத்துச்செல்ல, கப்பல் ஒன்று வந்து சேர்ந்தது. அக்காலத்தில் ஜாக்செனுடன், இவ்வீரர் இருவரும் புறப்பட்டுத் தமது நாட்டின் அருகுள்ள *வார்டோ தீவை அடைந்தனர். நான்செனுக்கு மட்டும் தாம் திரும்ப வந்தடைந்தது பற்றி மகிழ்ச்சியில்லை. தாம் சென்ற கலமும் அதிலிருந்த தமது துணைவர்களும் என்னவானார்கள் என்பதே அறியாது மனமொடிந்தார். அதுபற்றிய எச் செய்தியையும் அவர் தெரிந்து கொள்ளவே முடியவில்லை.

நாடு நெருங்குதல்

இறைவன் இவ்வருத்தத்தை நான்செனுக்கு நிலை நிறுத்தவில்லை போலும்! அன்று மாலையே தமது கப்பலும் துணைவர்களும் அதே தீவை வந்தடைந்ததைக் கண்டு தமது துணைவர்களுடன் சேர்ந்துகொண்டார். ஜாக்செனிடம் விடை பெற்றுத் தாம் வந்த கப்பலிலேயே பிரயாணம் செய்து, தாம் புறப்பட்ட மூன்றாண்டுகட்குப் பிறகு தமது நாடாகிய நார்வேயை வந்தடைந்தார். தாம் கண்டவற்றை அனைவருக்கும் அறிவுறுத்தினார்; 'வட திசை விண்ணொளியை' வருணித்தார். இதனைக் கேட்கும்பொழுதே அனைவரும் மயிர்க் கூச்செறிந்து மதி மயங்கி நின்றனர். தாம் உடுத்துச்சென்ற உடுப்புக்களை அணிந்து காண்பித்தார். காடிக் கோலத்தைக் கண்டு அனைவரும் வயிறு குலுங்கச் சிரித்தனர். தாமும் அவர்களுடன் சேர்ந்து நகைத்தனர் நான்சென். வட துருவத்தை அவர் அடையா விட்டாலும் அவர் வெகுதூரம் சென்று வந்ததால் அது சமயம் அவரை வட துருவம் கண்ட வெற்றி வீரர் எனக் கொண்டாடினர் அந் நாட்டவர்கள்.

---

* Vardo

நான்சென் கண்ட வெற்றி 1909-ம் ஆண்டு மறைந்து படுவதாயிற்று. அவ் ஆண்டு *கமாண்டர் பியரி என்பார் வடதுருவத்தையே சேர்ந்து மீண்டு விட்டார் என்று தோன்றிய புதிய செய்தியே அதனை மறையச் செய்தது. அமெரிக்காநாட்டைச் சேர்ந்த பியரி என்பவர் ஒரு வருடம் கடும் பயணம் செய்து வடதுருவத்தை அடைந்து விட்டார். மானிடன் இயற்கையை வெற்றிகொள்ள முடியாது என்பது பொய்த்து விட்டது. அவன் காணுதனவற்றைக் கண்டான்; கிட்டாத இடத்தையும் கிட்டினன். இயற்கையைத் தன் மதியாலும் மதிநுட்பத்தாலும், உடல் உரத்தாலும், உள்ள ஊக்கத்தாலும், எந்திர சாதனங்களாலும் வெற்றி கொண்டான் மானிடன்.

வடதுருவ வெற்றி

மானிடன், ஆர்க்டிக் பெருங் கடலின் உறைநீர்ப் பரப்பில் அமைந்துள்ள வடதுருவத்தை அடைந்து வெற்றிகொள்ள முயற்சித்ததுடன் நிற்கவில்லை. அண்டார்க்டிக் கண்டத்தில் அமைந்துள்ள தென் துருவத்தைக் காணுவதிலும் தவறவில்லை புதுமை காணும் வீரர்கள். தென் துருவத்தைக் காண்பதற்குப் பலர் போட்டி யிட்டனரெனில் புதுமை காணும் வீரச் செயலில் மக்கள் கொண்டிருந்த ஆர்வம்தான் என்னே! †ஸ்காட், ஷேகல்டன், அமண்ட்சென் முதலியோர் தென் துருவ முயற்சியில் ஈடுபட்டோரில் முக்கியமானவர்களாவர்.

தென்துருவ முயற்சி

நியூஸிலாந்து நாட்டைச் சேர்ந்த ஸ்காட் என்னும் வீரர் 1902-ம் ஆண்டின் முன் தொடக்கத்தில் தமது தென்துருவப் பிரயாணத்தைத் தொடங்கினர். அவருடன் ஷேகல்டன், வில்சன் என்னும்

---

* Commander Peary † Scott, Shackleton, Amundsen

புத்துரம் கொண்ட இரு வீரர்களும் தொடர்ந்தனர். வட துருவங் காண நான்சென் கையாண்ட முறைகளை இவர்களும் மேற்கொண்டனர்.

ஸ்காட்
1902

தென் பசுபிக் பெருங் கடலில் தகுந்த சாதனங்கள் அமைந்த கலத்தைச் செலுத்தி அண்டார்க்டிக் வட்டத்தையும் தாண்டிச்சென்று, அண்டார்க்டிக் கண்டத்தின் தென் கிழக்கு முனையாகிய *அடேர் முனையையும் அடைந்துவிட்டார். இனித் தரைப் பகுதியில் கால் நடையாகச் செல்ல வேண்டியவராயினர் வீரர்கள்.

ஸ்காட் கடக்க வேண்டிய பகுதி, தரைப் பரப்பாலும், தரைப்பாகம் இலகுவில் கடந்து செல்லக் கூடியதாக இருக்கவில்லை. பனிச் சரிவுகளும், பனிப் பாறைகளும் நிறைந்திருந்தன. வழுக்கு வண்டிகளை இழுத்துச் செல்வதும் இயலாததாகி விட்டது. வீரர்கள் மூவரும் வழுக்குச் சோடுகளை அணிந்து பற்பல இடங்களிலும் தங்கி, இரு திங்கள் கடும் பிரயாணம் செய்து 1902-ம் ஆண்டின் இறுதியில் 82-வது பாகையைத் தாண்டிவிட்டனர். இந்த இடத்திற்கு அப்பால் வீசிய குளிர் காற்று மிகக் கடுமையாக இருந்தது. இருக்கை யமைத்துத் தங்கி யிருத்தலும் இயலாததாயிற்று. காற்றின் விசையால் கூடாரங்கள் பெயர்த்துக் கொண்டு போகப்பட்டன. தாங்க முடியாத காற்றில் அவர்களால் அதற்கு மேல் செல்ல இயலாததால் திரும்பிவிட உறுதிகொண்டு, தமது திரும்பு பயணத்தைத் தொடங்கினர்.

காற்றின் மிகுதியாலும், தாங்க முடியாக் குளிராலும், சத்தில்லா உணவுப் பொருள்களாலும்,

* Cape Adare

வீரர்களின் உடல் நலம் கெட்டு, உதிரம் கெட்டு, மேல் தோல் கறுத்து, படை நோய் தோன்றியது. தாங்க முடியாக் குளிருடன் பொறுக்க முடியாத் தினவும் ஏற்பட்டது. ஒருவர் மாற்றி ஒருவர், மற்றவர்களை வழுக்கு வண்டியில் இருத்தி வலித்து இழுத்து வழி கடந்தனர். கைவசம் கொண்டு சென்ற சில நாய்களைக் கொன்று தின்ன வேண்டிய நிலைமையையும் எய்தினர். இந்நிகழ்ச்சியை நோக்கும் போது 'ஆடு தின்று அடகு தின்றனர்' எனப் பண்டைக் கவிகள் கூறும் மரபு உண்மை யென்னும் உறுதிகொள்ளலாம் போலும்!

பனி வெளியில் படைநோய்

நலங்கெட்டிருந்த வீரர்கள் ஒருவாறு தாம் முன்பு கரை யிறங்கிய இடத்தைக் கிட்டினர். ஷாக்கல்டன் என்பார் இனி எப் பயணத்தையும் மேற்கொள்ளாதவாறு கொடுநோய்க்குள்ளாகி வருந்தினர். பல தினங்கள் சென்ற பின் அவ்விடத்திற்கு இவர்களது உதவிக்கான கப்பல் ஒன்று வந்து சேர்ந்தது. இவர்களுக்குத் தேவையான புதிய பொருள்களையும் உணவுப் பொருள்களையும் அக் கப்பல் தாங்கி வந்திருந்தது. ஸ்காட் அவற்றைப் பெற்றுக்கொண்டார். ஷாகல்டன் மட்டும் தமது நாடடைவதற்கு அக் கப்பலிலேயே ஏறிச் சென்றார். ஸ்காட் பின்னும் பல மாதங்கள் ஆங்குத் தங்கியிருந்து மறுமுறையும் முயற்சிக்க எண்ணங்கொண்டு வில்சனுடனும் மற்றொரு வீரனுடனும் தங்கிவிட்டார்.

உதவிக் கப்பல்

தென் துருவப் பிரதேசத்தில் தங்கிவிட்ட ஸ்காட், வசதியாகவுள்ள ஓரிடத்தில் குடிலமைத்துச் சில மாதங்கள் தங்கியிருந்து, மறுபடியும் தம் முயற்சியைத் தொடங்கினார். தம்முடனிருந்த துணை

வர்களுடன் முன்னேறிச் சென்றார். நாட்கள் ஆக ஆக உணவுப் பொருள்கள் குறைந்து படுவதாயிற்று. இஃதறிந்த வீரர்கள் தமது உணவையும் குறைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. கடுமையான உழைப்பினால் வழி நடக்க வேண்டிய உடல் உரத்திற்குக் கைவசமிருந்த உணவுகள் போதாததாகிவிட்டன. 'மெய் வருத்தம் பாரார், பசி நோக்கார்' என்பதற்கிணங்க தமது கடும் பசியையும் பொருட்படுத்தாது தென் துருவம் நோக்கிச்சென்று கொண்டிருந்தார். தேகதிடம் குறைந்தும் முயற்சி குன்றவில்லை. பல இடங்களில் வீரர்கள் சோர்ந்து விழவும் நேரிட்டது. மேற்கொண்டு செல்லும் எண்ணத்தைக் கைசோரவிட்டு திரும்பவும் தாம் கலம் நிறுத்தி யிருந்த கரை வந்து சேர்ந்தனர்.

உணவுக் குறை

கலமேறித் தமது நாடு சென்றுவிட விழைந்தனர் வீரர்கள். அந்தோ! அவர்கள் ஆங்கு வந்தடையவும், அவர்களது கலம் சூழ்ந்த பனியில் ஆழ்ந்து பதிந்து கிடந்தது. அதை விடுவிக்க மனித யத்தனத்தால் முடிவதாக இல்லை. இயற்கையை மானிடன் வெற்றி கொள்ள முயற்சி கொண்டாலும், இயற்கை மானிடன் மீது வெகுளாது அவனுக்கு நன்மை செய்யவே முற்படுகிறது. இவர்கள் எதிர்பாரா வகையில் பனி இளகி, கப்பல் செல்லத் தக்க நிலையைக் கடல் நீர் அடைந்தது. ஸ்காட் உடனே பயணமாகித் தம் நாடாகிய நியூஸிலாந்து வந்தடைந்தார்.

ஸ்காட் நாடடைதல்

ஸ்காட்டுடன் பிரயாணம் செய்து தென் துருவத்தின் 82-வது பாகையையும் தாண்டிச் சென்று

உடல் நலம் குன்றி நாடு வந்தடைந்த ஷாகல்டன் அதன் பின் இரண்டு மூன்று ஆண்டுகள் வறிதே யிருந்தார். இன்றியமையாத பல வசதிகளைக் கைக்கொண்டு மறுமுறை முயற்சிக்க எஞ்சி நின்றது அவரது அவா. 1907-ம் ஆண்டு தாமே தலைமை பூண்டு, துருவப் பிரதேசத்தில் செல்லத் தகுந்த கப்பலொன்றைத் தமது நேர்ப் பார்வையிலேயே கட்டி முடித்துத் தக்க துணைவர்களையும் சேர்த்துப் புறப்பட்டார்.

ஷாகல்டன் 1907

ஷேகல்டன் பல இடங்களில் தங்கி ஓராண்டு பிரயாணம் செய்தார். அவர்களைத் தாங்கிச்சென்ற கப்பல் அவர்களைத் தரைப் பகுதியில் கொண்டு சேர்த்தது. தாம் முன்பே கண்டிருந்த அனுபவங்களின் பயனாக, ஷாகல்டன் அந்தக் கரைப் பகுதியில் உறுதியான உறைவிடமொன்றை அமைக்க ஆயத்தம் செய்தார். வீரர்கள் இருக்க இருக்கையும், பொருள்களையும் பண்டங்களையும் சேமித்து வைக்கப் பண்டகசாலைகளும், தாம் அழைத்துச் சென்ற அசுவங்களைக் கட்டி வைக்கப் படிகளையும் ஒழுங்கு பெற அமைத்தார். உண்டியும் உறையுளும் பொருத்தமானதாக வமைந்தன. ஆனால் குதிரைகளுக்கு மட்டும் அந்த இடத்தில் நிலவியிருந்த காலநிலை பொருந்தவில்லை. குடி நீரும் அவைகளுக்கு ஏற்றதாக இல்லை. இக் குறைபாடுகளால் சில பரிகள் இறந்துவிட்டன.

இருப்பிடம்

வசதியாக அமைந்த இந்த இடத்திலிருந்து வீரர்கள் அடிக்கடி பக்கலிலுள்ள பிரதேசங்களுக்குச் சென்று மீண்டு வருவர். வீரர்கள் பக்கலில் இருந்த பருப்பதங்களின்மீது ஏறி மீளுவர்; வழுக்

குச் சோடுகளையணிந்து வழுக்கி நடக்கப் பழகுவர். துருவம் நோக்கித் துருவிச்செல்லக் காலநிலை தக்க

மூன்று பிரிவுகள்

தாக மாறியபொழுது, வெற்றி முழக்குடன், வீர உணர்ச்சியுடன், உள்ளக் கிளர்ச்சியுடன், ஷாகல்டனும் துணைவர்களும் மூன்று பிரிவுகளாகப் பிரிந்து சென்றனர். தென் துருவம் நோக்கிப் போகும் குழுவிற்கு ஷாகல்டன் தலைமையாக அமைந்தார். மற்றும் தென் துருவத்தைப் போன்ற முக்கியமான இடமாகிய † மாக்னெடிக் போல் என்னும் காந்த துருவத்தை நோக்கி மற்றொரு குழு சென்றது. பக்கவிலிருந்த உயர்ந்த மலைகளையும் அதனைச் சார்ந்துள்ள வெளிகளையும் காணப் பிறிதொரு குழு சென்றது. ஒவ்வொரு குழுவினரும் ஒருவருக்கு ஒருவர் வெற்றிகூறிப் பிரிந்து சென்றர்.

88-ம் பாதை

தென் துருவம் நோக்கிச்சென்ற ஷாகல்டன் மிக உற்சாகத்துடன் முன்னேறிச் சென்றார். செல்லும் பாதைகளில் பல இடங்களில் கூடாரங்களும் உணவுப் பொருட் சாலைகளும் அமைத்துச் சென்றார். தென் துருவம் செல்லச் செல்ல கைவசம் கொண்டு செல்லும் பொருள்களின் பளு குறையவேண்டுமாதலால் இவ்வாறு அமைத்துச் சென்றார். உணவுப் பொருள் குறையக் குறையப் பக்கலிலுள்ள பண்டக சாலைக்கு எவரேனும் சென்று அங்குள்ளவற்றைக் கொணரலாம், மற்றவர்கள் முன்னேறிச் சென்று கொண்டே இருக்கலாம் என்பதே அவரது தீவிரத் திட்டமாகும். அவ்வாறே விடா முயற்சியுடன் தொடர்ந்து பனி தவிர வேறெதையும்

† Magnetic Pole

காண முடியாத அப்பரந்த பனி வெளியில் சென்று கொண்டிருந்தார். 1909-ம் ஆண்டு ஜனவரித் திங்கள் அவர் 88-வது பாகையையும் மிக வெற்றியுடன் தாண்டிச் சென்றார். மேலும் ஒரு நூறு மைல் தூரம் சென்று விட்டால் அவர் தமது முயற்சியில் முற்றிலும் வெற்றி கண்டு வருவார்.

எவரும் கிட்டாத அமைப்பைக் கொண்டுள்ளோம், மானிடன் ஒருவன் நம்மையும் கிட்டுவதா என இயற்கை ஆத்திரங் கொண்டது போலும்!
அவரை அதற்கு மேலும் அண்ட
இயற்கையின் விடாமற் செய்வது போல், இயற்கை
சீற்றம் சீற்றங் கொண்டது. பனிப் பிரதேசத்
தின் ஒளி அவர்களது கண்களை மங்கச் செய்தது. வழிப்பாதை மேடு பள்ளமாக அமைந்து அவர்கள் கால்களைக் கடுக்கச் செய்தது. வலித்து வீசும் வாடைக்காற்று அவர்களது காதுகளைச் செவிடுபடச் செய்தது .கடுங்குளிர் உதிரத்தை உறையச் செய்தது. இயற்கை இன்னல் இழைப்பது போதாதென்று இறைவனும் சோதனை செய்ய முற்பட்டான் போலும்! உணவுப் பொருள்கள் முழுவதும் அழிந்து போயின. குதிரையைக் கொன்று பக்குவம் செய்து உணவு கொண்டே சிறிது பசியாற வேண்டியதாயிற்று! 'முரட்டுத்தனமாக முயற்சி கொண்டு முன்னேறி உயிரிழப்பதில் பயனேதுமில்லை; தாம் இறந்தது கூட எவருக்கும் தெரியவரப் போவதில்லை. தம் கால்கள் தாங்கிச் சென்ற வரையில் துருவத்தை நெருங்கியாயிற்று. இதையாவது பிறருக்கு அறிவுறுத்துவோம்' என வீரர்கள் எண்ணித் திரும்பவும் பல நாட்கள் வழி நடந்து கரையிலுள்ள தமது இருப்பிடம் வந்து சேர்ந்தனர்.

ஷாகல்டன் திரும்ப வந்து சேர்ந்த சில தினங்களுக்குப் பின், மற்றிரு திசைகளுக்குச் சென்றிருந்த இரு குழுவினரும் வெற்றி முரசுடன் வந்து சேர்ந்தனர். அனைவரும் உடன் புறப் பட்டுத் தம் கப்பலைச் செலுத்தி நியூ ஸிலாந்து வந்து அடைந்தனர். ஸ்காட் முன்பு 82-ம் பாகையை மட்டும் தாண்டியிருந்தும் இம்முறை ஷாகல்டன் 88-ம் பாகையையும் தாண்டி விட்டது குறித்து தமது நாட்டு வீரரின் முன்னேற் றம் கண்டு நியூஸிலாந்து நாட்டினர் பெருமிதம் கொண்டு வீரர்களைப் போற்றிப் பாராட்டினர்.

பாராட்டு

தென் துருவத்திற்குச் சமீபம் சென்று ஷாகல் டன் மீண்டதில் பெருமை கொண்ட ஸ்காட், தாமும் மறுமுறைச் சென்று அந்த இடத்தையும் தாண்டிச் சென்று தென் துருவத்தையே அடைந்துவிட வேண்டும்; தென் துருவம் அடைந்து மீண் டாலும் மீளாவிட்டாலும் முயற்சிக்கு முற்றுப்புள்ளி யிடலாகாது; என உறுதி செய்துகொண்டு 1910-ம் ஆண்டின் இறுதி யில் புறப்பட்டார். பயிற்சி பெற்ற பல துணைவர் களுடன் பயணங்கொண்டு இம்முறை எப்படியும் வெற்றி காண்போம் என்ற திடமான உறுதி யுடனே எதையும் பொருட்படுத்தாது, உயிரையும் மதியாது, எண்ணிலா இடுக்கண்களுக்கும் தப்பி, 1912-ம் ஆண்டு ஜனவரி மாதம் 17-ம் நாள் தமது முயற்சியின் முடிவிடம்—உலகத்தின் தென்முனை—எவரும் கிட்டாத துருவம்—ஆகிய தென் துருவத்தை அடைந்து நின்றார். ஸ்காட் வெற்றி கண்டது உண்மையே; துருவங் கண்ட பெருமை அவரைச் சாரும். ஆனால் ஸ்காட் துருவங் கண்ட பெருமையை முதன்மையானதாகப் பெறவில்லை. இவர் அங்கு போய்ச் சேரு முன்னரே முதன்மையாகிய வெற்

ஸ்காட் 1910

றித் திருவை காப்டன் அமண்ட்சென் என்பார் பெற்றுவிட்டார்.

**அமண்ட்சேன் 1911**

நார்வே தேசத்தாராகிய காப்டன் அமண்ட்சென் 1911-ம் ஆண்டு தென் அமெரிக்காவினின்றும் புறப்பட்டுத் தென் பசுபிக் பெருங் கடலில் பிரயாணம் செய்யுங்கால், தாம் எதிர்பாரா விதமாக அண்டார்க்டிக் கண்டத்தின் கரை யொன்றில் தங்க நேரிட்டது. துருவப் பிரதேசத்தின் கரையில் தங்கிய அமண்ட்சென் திடீரெனத் தென் துருவ முயற்சியில் இறங்கினர். அவரும் அவரது திறமையான துணைவர்களும் வழி நடந்து, தென் துருவத்தை அடைந்த முதன்மையான வீரர்கள் என்னும் வெற்றித் திருவைப் பெற்றனர். அமண்ட்சென் துருவம் கிட்டிய ஒரு மாதத்திற்குப் பிறகுதான் ஸ்காட் துருவத்தை யடைந்தார்.

**மானிடனின் வெற்றி**

மானிடன் பல வருடங்களும் இயற்கையுடன் போராடினன்; விடாமுயற்சி கொண்டு நின்றனன்; இயற்கை விடுத்த இன்னல்களுக்கு அடிபணியவில்லை; இயற்கையின் தன்மையறிந்து அவன் ஓடி ஒளியவில்லை; அஞ்சா நெஞ்சத்துடன், சலியா ஊக்கத்துடன் எதிர்த்து நின்றான். முதன் முறைச் சென்ற மானிடன் அத்துடன் தன் கடன் முடிவுற்றது என எண்ணிக் கொள்ளாது திரும்பவும் சென்றான். வெற்றிகொள்ள ஊக்கம்கொண்டான். உயிரையும் வெறுத்தான். கடைசியில் இயற்கை அடி பணிவதாயிற்று. இயற்கையின் 'மணிமுடி தாழ்ந்தது. வெற்றி பெற்ற மானிடன் மணி மகுடம் அணிந்தான்.

---

# 7. இணையற்ற இமயம்

உலகத்துள் தலையாய் வைத்தெண்ணப்படும் பெருமை பெற்றது நம் இந்திய நாடு. பல்வகை இயற்கை எழில்களும், பொன் கொழிக்கும் வளனும் கொண்டு விளங்குகிறது. எத் தேயத்தவரும் விரும்பும் நிலையில் நிலவுவது நம் நாடு. மற்றும்

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு

என்னும் நாட்டின் இலக்கணத்திற்கு அமைந்த இயல்புகள் அனைத்தையும் தன்னகத்தே கொண்டு விளங்கி நிற்கின்றது. உலகத்திலேயே உயர்ந்த உயரத்தையுடைய இணையற்ற இமயத்தை உற்றதும், நம் நன்னாடு. 'மன்னும் இமயம் எங்கள் மலையே' என்று நாம் பெருமை கொள்ள அமைந்த இமயத்தைப் பெற்றது நம் இந்திய நாடு. இமயம், மாபெரும் பொருள்களுக்கும் செயல்களுக்கும் பிழைகளுக்கும் உதாரணமாகக் கொள்ளும் பெருமை உடையது. இந்தியத் தந்தை, ஒப்பற்ற தலைவர், உலகப் பெரியார், உத்தமர் மகாத்மா காந்தியடிகள் இமயத்தையே அடிக்கடி உதாரணமாகக் கைக் கொண்டனர்.

நம் நாடு

இந்தியாவுக்கு வடக்கு வரம்பாக இயற்கையாய் அமைந்த இமயமலை மிகவும் தொன்மையானது. உலகத்திலேயே உயர்ந்துள்ள கொடுமுடியைக் கொண்டது. 'அளக்கல் ஆகா அளவும், துளக்கல் ஆகா நிலையும் தோற்றமும்', ஏற இயலா உயரமும் படைத்தது. கணவாய்களால் அல்லது வேறெவ்விதத்தும் கடக்க முடியாத பரப்பு வாய்ந்

இமயமலை

தது. பல வரைகளைக் கொண்டு தொடராக அமைந்தது. ஆயிரத்து ஐந்நூறு மைல் நீளமும் இருநூறு மைல் அகலமும் உடையது. நூற்று அறுபதுக்கும் மேற்பட்ட பலபல சிகரங்களையுடையது. மேல் வானம் இங்குத் தான் பொருந்தித் தாங்கப்பட்டு நிற்கின்றதோ என ஐயுறும் வகையில், வான் முகட்டை முட்டும் 'எவரஸ்ட்' என்னும் கொடுமுடியைத் தனதாகக் கொண்டது. இதனகத்தே யுள்ள சிறப்புக்களையும் அமைப்புக்களையும் கண்ணுற்றுத் தேவர்களும் விரும்பி இதனைத் தமது உறைவிடமாகக் கொண்டுள்ளார் என்று சிறப்பித்துக் கூறும் சிறப்பு வாய்ந்தது.

இமயமலை பல சிகரங்களைக் கொண்டதாலுைம் அவற்றுள் தவளகிரி, காஞ்சன சிருங்கம், எவரஸ்டு என்னும் கொடுமுடி ஆகிய மூன்றுமே முக்கியமானவைகளாகும். இவைகள் முறையே 26,826 அடி, 28,156 அடி, 29,002 அடி உயரமுள்ளவையாகும்.

சிகரங்கள்

தவளகிரி என்னும் தொடருக்கு 'வெண்ணிறமலை' என்பது பொருள். எக்காலத்தும் வெண்பனிப் படலம் ஆங்கு மூண்டு இருப்பதனுல் இப் பெயர் பெற்றது போலும். காஞ்சன சிருங்கம் என்பது 'பொற் சிகரம்' எனப்பொருள்படும். இச் சிகரம் காலைக் கதிரவன் கதிர்களோ, மாலைப் பரிதியின் பரந்த ஒளியோ பெறின் பொன்னிறமாக மிளிரும். இதனை அடையும் கருங்காகமும் பொன்னுக மாறும் எனின், இதைவிட எவ்வாறு அதனைச் சிறப்பிக்க முடியும்? எவரஸ்ட் என்னும் கொடுமுடி, 'மாமலையரசியின் மணிமுடி' எனப் புகழப்படுவது. இதனினும் உயர்ந்த சிகரம் எங்குமே இல்லை. இமாலயம் என்னும் தொடர், 'பனி வீடு' எனப் பொருள்படும். இவ்வுயர்ந்த கொடுமுடி, நிறைந்த உறை பனியால் எப்பொழுதுமே மூடுண்டு இருக்கிறது.

உயர்ந்த இக் கொடுமுடியில் எதுவும் உயிர் வாழ்வதாகத் தெரியவில்லை. புல் பூண்டு, மரம் மட்டை, பயிர் பச்சை, பூச்சி புழு முதலிய எவ்விதப் பொருள்களும் இருப்பதில்லை. மிகவும் குளிர்ச்சியான பிரதேசம். உறைபனி உறைந்து அதுவே பாறையாகி யிருக்கும். சிறிது வெப்பம் படும்போது அப் பனிப் பாறைகள் உருகிவிடும். பனி நெகிழ்ந்து சதுப்பு நிலமாகிவிடும். மழை நீர் மல்கி நிற்கும். குடி நீர் பாழ்பட்டு இருக்கும். காற்று கேடுற்றிருக்கும். சிற்சில சமயம் நச்சு ஆவி தோன்றும்.

கோடுமுடி

வரையின் உச்சிப் பிரதேசம் இவ்விதமிருப்பதானாலும் அதற்குச் சற்றுக் கீழேயுள்ள மலைப் பிரதேசம் எவ்வாறுள்ளது என்பதைக் கவனிப்போம். மலைகளின் இடையிடையே கணவாய்கள் நிறைந்திருக்கும். அடவி என்று சொல்லத்தக்க இலக்கணமுடைய பருத்து வளர்ந்த மரங்களும், நீண்ட கொடிகளும், புதைந்த புதர்களும் நிறைந்திருக்கும். மலையையே அசைக்கும் ஆற்றல் வாய்ந்த சண்டமாருதம் தடையின்றித் தாண்டவமாடும். கடுங்காற்றும் கொடுங்காற்றும் கலவியே வீசும். கானகம் வாழ் விலங்கினங்கள் நிறைந்ததாயிருக்கும்; கொடு விலங்குகள் வாழுமிடமாகும். பாம்பு, நாகம் முதலான பல ஊர்வனவற்றிற்கு உறைவிடம். கடுங்காற்றால் மரக்கிளைகள் முறிவுற்றுக் கீழே சீறி விழும். உச்சியினின்றும் கற்பாறைகள் உருண்டோடி வரும். கான்யாறுகள் பலவாக நிரம்பியிருக்கும். ஒரு சமயம் பளிங்கன்ன நீர்வந்து பரவியோடும்; மறுசமயம் குருதியன்ன செந்தண்ணீர் சுழன்று வந்து பாயும்; பிறிதொருகால் குழம்பன்ன கருநீரும், கருஞ்சேறும் நிறைந்த தண்ணீர்

மலைப் பிரதேசம்

தடையின்றி ஓடும். வேரற்ற பெரு மரங்கள் அதனுடனே ஓடும்.

சேற்றிலும் செந்தாமரை பூக்குமன்றோ! பல பேராறுகளையும், அளவற்ற அடவிகளையும், மனங் கலக்கும் விலங்குகளையும், தேகத்து உதிரத்தையும் உறைக்கும் உறைபனியையும், கடக்க முடியாக் கணவாய்களையும், நடக்க முடியாப் பாதைகளையும் இம்மலை பெற்றிருந்தும், மலைச்சாரலில் சிற்சில இடங்கள் வர்ணப் பூச்சோலைகளும், எழிலுறும் ஏரிகளும், பளிங்கு நீரூற்றுக்களும், கலைமான்களும், கலாப மயில்களும் பொலிந்து விளங்குவதாயின. இம் மலைச்சாரலில் சில சமயம் பொழியும் பெருமழை வான்முகட்டையும் தரைத்தட்டையும் இணைந்து நின்று கடலன்ன காட்சி யளிக்கும். பல சமயம் பனித் திவலை பறந்து வந்து, சிறு தூற்றலாக நிற்கும். பல காட்டாறுகள் இமயத்தில் தோன்றி ஓடினும் நறுங்கங்கை, சிந்துமுதலிய பேராறுகளும் தோன்றி, ஓடிவந்து சமவெளிப் பிரதேசங்களைச் செழிப்பிக்கின்றன.

மலைச் சாரல்

இமயத்தில் இலங்கும் இவ்வித வளங்களைக் காண வேண்டிப் பல நாட்டவரும், தூர தேசத்தவரும், அயல் நாட்டு அந்நியரும் நாட்டங் கொண்டனர். உலகிலேயே முடியுயர்ந்த இக் கொடுமுடியைக் காணவேண்டும் என்று எண்ணங் கொண்டனர். இதுவரையில் பல இடங்களுக்கும் புதுமை காணச் சென்றவர்கள் செல்வம் பற்றியும், வெற்றி பற்றியும், மதம் பற்றியுமே பிரயாணம் செய்தார்கள். ஆனால் இமயத்தைக் காண்பதில் அதுபோன்ற

அந்நியர் அவா

எவ்வித நோக்கமோ எண்ணமோ இடையாது. உயர்ந்த சிகரத்தைக் காணவேண்டும்; அதில் முதலில் கால் வைக்க வேண்டும்; அந்த ஒப்பற்ற பெருமையை அடைய வேண்டும் என்னும் எண்ணங்களே சிகரத்தைக் காணவேணவாக் கொண்டு தூண்டியது.

ஆனால், அக் கொடுமுடியைக் காண முற்பட்டுச் செல்வதாயின் பல இடுக்கண்கள் எதிர்ப்பட்டு நிற்கின்றன. கீழ் விழும் கற்பாறையும், உறைபனியும் எவரையும் ஏறவொட்டாமற் செய்து விடுகின்றன. பனிக்கட்டிகளை வெட்டிப் படிக்கட்டுகளை அமைத்தே மேற் செல்ல வேண்டும். பனி நெகிழ்ந்த இடங்கள் சதுப்பு நிலமாகி, அவற்றில் காலை வைத்தால் உள்ளுக்கு இழுக்கும். கடுங்குளிரால் உடலெல்லாம் விறைத்துப் போகும். ஆங்கு நிலவும் காற்றில், மனிதன் சுவாசிக்க இன்றியமையாத பிராண வாயு மிகக் குறைந்த அளவிலேயே கலந்துள்ளது. அது சுவாசிக்கத் தக்கதாக இருக்கவில்லை. எங்குமுள்ள உறை பனியின் வெண்மையைத் தவிர வேறு எவ்வித வண்ணத்தையோ, காட்சியையோ காண முடியாது. வெண்ணிறம் கண்டு கண்கள் கூசும். வீசும் காற்று, காதுகளைச் செவிடு படச் செய்யும்.

இடையூறுகள்

இவ்வளவு இன்னல்கள் இருந்துள்ளன எனத் தெரிந்து தான் இம் முயற்சியில் ஈடுபட முயன்றார்கள். லண்டன் மாநகரில் உள்ள *ராயல் பூகோளக் கழகம், †ஆல்பைன் ஆராய்ச்சி கழகம் ஆகிய

* Royal Geographical Society † Alpine Club

கழகங்கள் இப் பெரு முயற்சியில் ஈடுபடத் துணிந்தன. மலை நாட்டில் வசித்தவர்களாகவும் மலையேறுவதில் பயிற்சி பெற்றவர்களாகவும் உள்ள தகுதி வாய்ந்த வீரர்களைத் துருவித் தேடுவாராயினர். ஆல்பைன் கழகம் இதற்கேற்படும் செலவில் பெரும் பகுதியைத் தாமே யேற்றுக் கொள்ளுவதாக முன் வந்தனர். இப் பணியிலீடுபடத் தக்கார் சிலரை அனுப்பி வைக்க இசைந்தனர். கொடுமுடி காணும் குழு ஒன்றும் அமைக்கப் பெற்றது. *சர் பிரான்ஸிஸ் யங் ஹஸ்பண்ட் என்பார் அதுபோது ராயல் பூகோளக் கழகத்தின் தலைவராகத் திகழ்ந்தவர் ஆவார். அவரையே அக் குழு தலைமையாகக் கொண்டது.

முயற்சி

பல ஆயத்தங்களுடன் சென்றாலும் ஒரே தடவையில் ஒரு குழுவினராலேயே கொடுமுடியைக் காணும் பேறு கிட்டி விடாது. எத்தனை பேர் போகவேண்டுமோ? எத்தனை முறை போகவேண்டுமோ? எத்தனை ஆண்டுகள் தொடர்ந்து முயற்சிக்க வேண்டுமோ? யாவற்றிற்கும் விடாமுயற்சியும், உரமுள்ள வீரமும், அரசினர் உதவியும் தேவை யன்றோ? இமயம் அமைந்துள்ள இடத்தின் பெரும் பகுதி, திபேத்திய அரசினருக்குச் சொந்தமாக உள்ளது. சமவெளியைக் கடந்து மலைப் பிரதேசத்தையடைய, இந்தியப் பகுதியையும் கடந்து செல்ல வேண்டும். ஆனதால் இவர்கள் மேற்கொள்ளும் பயணத்திற்கு பிரிட்டிஷ், இந்திய, திபேத்திய அரசினர்களிடம் உத்திரவு பெறவேண்டியது அவசியமாகும். தகுதி வாய்ந்த கழகங்கள் ஆனமையாலும், கௌரவம்

ஆயத்தம்

* Sir. Francis Younghusband

வாய்ந்த அறிஞர்கள் ஆனதாலும் யங் ஹஸ்பண்டின் தலைமையில் ஏற்பட்ட 'கொடு முடி காணும் குழுவினர்க்கு' அரசினர் உத்திரவு கிட்டுவதும் அரிதோ!

**புறப்பாடு**

இமய முயற்சியை அறிந்து பலரும் பலவாறு பேசினர்; எள்ளி நகையாடினர். 'இவர்கள் உயிரை இழக்க அங்கு ஏன் போகவேண்டும்?' என்று இரங்கிச் சொல்லினர். 'இக்கலை இவர்கள் அடையும் பேறும் பயனும் யாவை?' என்று கூறினர். புதுமை காண விழையும் உள்ளம், ஊக்கமும் உணர்ச்சியும் உள்ள உள்ளம், உரம் பெற்ற வைர உள்ளம் இவற்றை யெல்லாம் பொருட் படுத்துமோ? எவர் எது சொல்லினும் எடுத்த கருமத்தைத் தொடங்காது விடுவதில்லை, என்று உறுதி கொண்டது 'கொடுமுடிக் குழு'. தாம் வெற்றி பெறுவோம், என்ற முழு நம்பிக்கையும் இல்லாவிட்டாலும், எப்படியும் முயன்று தீர்வது என அவர்கள் தீர்மானங் கொண்டனர். 'முயற்சி திருவினை யாக்கும்' 'முயற்சி மெய் வருத்தக் கூலிதரும்' அன்றோ! அரசினர் ஆதரவும், அன்பர்கள் ஆசியும், பொதுமக்கள் பொருளும் அருள, தக்க துணைப் பலமும், பொருட் பலமும பெற்று பொருப்பினைக் காணப் புறப்பட்டது அக்குழு.

*குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று*
*உண்டாகச் செய்வான் வினை*

என்ற வள்ளுவர் கூற்றை வாய்மையாகக் கொண்டது. தாம் வெற்றியே பெறுவோம் என்ற முழு நம்பிக்கையும் கொண்டு தாம் எடுத்த பணியைத் தலை மேற்கொண்டது.

இமயக் கொடுமுடி கடல் மட்டத்திற்கு 29,002 அடி உயரத்தில் உள்ளது என்பதும், ஆங்குப் பனி நிறைந்திருக்கும் என்பதும் தவிர அங்குப் போய்ச் சேர ஏதேனும் வசதிகள் உள்ளனவா என்பது எவருக்கும் தெரியாது. பல இன்னல்களுக்கு உள்ளாக வேண்டும் என்று மட்டும் தெரியுமேயொழிய, அவர்கள் இனி நேரிற் கண்டால்தான் தெரியவரும். ஆனதால் முதற்பயணம், முடியையே அடைவதற்காக அமையா விட்டாலும், சிறு பகுதியேனும் சென்று, பாதை முதலியவற்றின் விபரங்களையும், எடுத்துச் செல்ல வேண்டிய சாதனங்களையும் தக்கவாறு அறிந்து கொள்ள ஏதுவாக அமையட்டும் என்றுதான் முற்பட்டார்கள். குழுவினருள் *மீட், †லாங்ஸ்டாவ் என்னும் இருவரும் சேர்ந்து பயணம் செய்து 23,000 அடி உயரம் வரையில் சென்று, அதற்குமேல் அவ்வரையின்மேல் ஏற முடியாதவர்களாகித் திரும்பி வந்து சேர்ந்தனர்.

பாதை பார்த்தல்

பாதை காணச் சென்றவர்கள் திரும்ப வந்து சேர்ந்ததும் தாம் சென்றுவந்த விபரங்களையும் ஆங்காங்கு நிறைந்துள்ள இடையூறுகளையும் அறிவித்தனர். 23,000 அடிக்குமேல் போக முடியவில்லையென்றும் சொன்னார்கள். மூச்சு மட்டும் சிறிதும் தட்டின்றி இருந்தால் இன்னும் சில தூரம் போகலாம் என்றும் முடிவு கூறினார்கள். இதனைச் செவிமடுத்தபின் மேலும் உரம் வாய்ந்த ‡ஹவர்ட்பரி என்பார் தலைமை தாங்கி, §மலாரி என்னும் வீரருடன் புறப்பட்டுச் சென்றார். மலாரி பலவாறு முயன்று 23,000 அடிகளையும் கடந்து சிறிது மேலே சென்றார்.

மறுமுயற்சி

* Meade † Longstaff ‡ Howard Bury § Mallory

மலை யேறுவதில் சிறந்த பயிற்சி பெற்ற மலாரியும் மேற்கொண்டு அதிகத் தூரம் செல்ல முடியவில்லை. அதற்குமேல் கடுங்காற்று பெருகி வீசுவதாயும், பனியால் நிறைந்த சதுப்பு வெளிகள் நிறைந்துள்ள தாயும், தடையின்றி மூச்சுவிட இயலவில்லை என்றும் திரும்பி வந்து தெரிவித்தார். ஆனால் தகுந்த சாதனங்களுடன் சென்றால் மிகவும் முயன்று வெகு தூரம் ஏறிச் செல்லலாம் என்று அறிவுறுத்தினார்.

**ஆராய்ச்சியும் ஆயத்தமும்**

இவற்றை யெல்லாம் கேட்டறிந்த கழகத்தார் இனி இதற்கு ஆவனவற்றை ஆராயத் தொடங்கினர். மூச்சுத் தடைப்படுவது ஆங்கு பிராணவாயு குறைவுற்று இருத்தலினாலேயே என்றும், அதற்குப் பிராணவாயு நிறைத்த பைகளையோ பீப்பாய்களையோ உடன் கொண்டு சென்றால் அதன் மூலம் சுவாசிக்கலாம் என்றும் கண்டனர். பனி குளிர் தாக்கா வண்ணம் உடல், முகம், கண் முதலிய உறுப்புக்களுக்குத் தக்க கவசங்கள் தரிக்க வேண்டும் என்றும் ஆராய்ந்தனர். விஞ்ஞானத் துறையிலும், ரசாயனத் துறையிலும் வல்லுநர் இருவர் இவற்றிற்கு வழி கண்டனர். கவசங்கள் தயாரிக்கப்பட்டன; பிராணவாயு நிரம்பிய பீப்பாய்கள் ஆயத்தம் செய்யப்பட்டன. *ஜெனரல் புரூஸ் என்பவர் தலைமையில் பயணம் தொடங்கினர். இவர் இமாலயப் பிரதேசத்தில் பல ஆண்டுகள் தங்கியிருந்தவர்; சிறந்த அறிஞர். மலை யேறுவதில் மாதிடங்கொண்ட மலாரி, † நார்ட்டன் என்ற வீரர்களும், விஞ்ஞானம் வைத்தியம் ஆகிய துறைகளில் தலை சிறந்து விளங்கிய ‡சாமர்வெல் என்பாரும், ரசாயன

* General Bruce † Norton ‡ Dr. Sommervelle

ஆராய்ச்சியில் அநுபவங் கொண்ட * ஜார்ஜ் பின்ச் என்பாரும் குழுவாக அமைந்து இமயங் காணப் புறப்பட்டார்கள்.

முன்னேற்றம்

1922-ம் ஆண்டு முன் தொடக்கத்தில் மார்ச் மாதக் கடைசியில் ஒப்பற்ற இவ் அறிஞர்கள் இணையற்ற இமயத்தின் கொடு முடியைக் காண †டார்ஜீலிங் விட்டுப் புறப்பட்டனர். தாம் கொண்டு சென்ற பொருள்களை மலைமேல் தூக்கிச் செல்லப் பல சுமை தூக்கிகளை அமர்த்தித் தக்க சாதனங்களுடன் வெற்றி கொள்ளும் வீரத்தோடு வரையின் மேல் விரைந்தனர். இதற்கு முன் இருமுறை சென்றிருப்பதனால் வழி நடப்பது எளிதாகவே இருந்தது. 23,000 அடிக்கு மேல், முன்பு மலாரி சென்று மீண்ட இடத்தை, எளிதில் அடைந்தனர். இதற்குமேல் செல்லுவதுதான் சற்றுக் கடினமாக அமைந்தது. தமக்குரிய சாதனங்களைப் பயன்படுத்தி, விஞ்ஞானிகள் வழி படித்தும் வகையிற் சென்று 24,600 அடி உயரமும் ஏறிவிட்டனர். இதற்கும்மேல் ஏறுவதற்கு இயலவில்லை. அவர்கள் கொண்டு சென்ற பொருள்களைச் சுமந்து நடக்க முடியவில்லை. ஒரு சிறு சுமையையும் கூட எடுத்துச் செல்வது இயலாததாகி விட்டது. கூட வந்த சுமை தூக்கிகள், மலைமேல் பெரும் பாரத்தைத் தூக்கிச் சென்று பழக்கப்பட்டவர்கள். ஆனாலும் இவ்வளவு உயரத்திற்கு மேல் சுமை தூக்கி வருவதில் அவர்களும் மிகுந்த துன்பம் அடைந்தனர்.

‘இமயக் குழுவினர்’ பல இன்னல்கட்கும் ஆளாகினரேனும், பின்னும் சின்னாட்கள்

---

* George Finch † Darjeeling

தொடர்ந்து முயன்றால் வரையினுச்சியை யடைய லாம் என்ற தைரியமும் கொண்டனர்.

மேலே செலல்

ஆனதால் இந்த இடத்தில் ஒரு சிறு கூடாரம் அமைத்துத் தம்மில் சிலரை யும், பொருள்களில் பலவற்றையும் ஆங்கு இருக்கச் செய்து மேலே செல்லலுற்றனர். அனைவரும் மகிழ்ச்சி கொள்ள முன்னேறிச் சென்று 26,985 அடி உயரத்தையும் அடைந்து விட்டனர். இனி நாம் இமயம் காண்பது நிச்சயம்; இன்னும் கொஞ்ச உயரமே உள்ளது என்று அவர்கள் ஆனந்தக் கடலில் மூழ்கினர். ஆனால் அது சமயம், பகற்பொழுது மிகவும் கழிந்து விட்டது. தாங்கள் மேலேறிச் சென்றால் இரவு கழிவதற்குள் தமது இருப்பிடமாகிய கூடாரத்தை யடைய இயலாதென்று கண்டனர். உறைவிடத்தில் இருப்பதே மிக்க தொந்தரை கொடுக்கும்போது மலைவெளியில் எவ்வாறு தங்கியிருத்தல் இயலும்? ஆதலின் அவர்கள் திரும்பவும் கீழேயுள்ள தமது கூடாரத்தைக் கிட்டினர். சில நாட்கள் தங்கியிருந்து பார்த்தும் காலநிலை கேடுற்றிருந்ததாலும், கடும்பனி மிகுந்து விட்டதாலும் அவர்கள் மலைச் சாரலுக்கு வந்து சேர வேண்டியதாயிற்று. மலையடிவாரம் வந்து சேர்ந்தனர்.

இதன் பின் அவர்கள் மறுமுறை பிரயாணம் செய்யத் துவங்குவதற்கு ஆண்டுகள் இரண்டு கழிந் தன. 1924-ம் ஆண்டு, திரும்பவும் ஜெனரல் புரூஸ் தலைமையில் புறப்பட்டனர். முன்

**1924**

முறை அம் முயற்சியில் ஈடுபட்டிருந்த வர்களே இம் முறையும் பெரிதும் கலந்து கொண்டனர். மற்றும் சில ரும் சேர்க்கப்பட்டனர். தக்க பயிற்சியும் அநுபவ மும் பெற்றவர்கள் ஆதலின் இமயத்தில் முன்பு

சேர்ந்த இடத்தையும் கடந்து விட்டனர். நார்ட்டன், சாமர்வெல் ஆகிய இருவரும் 28,000 அடி உயரத்தையும் உற்றனர்.

மாபெரும் வீரர் மலாரி தம் துணைவன் இர்வின் என்பானுடன் மேலும் சென்று கொண்டேயிருந்தார். மலாரி மேலே போய் ஏதேனும் கூடாரம் அமைக்க இடமறிந்து வந்து அறிவிப்பார் என்று அனைவரும் ஆவலுடன் அவர்கள் மேலேறிச் செல்வதைக் கவனித்துக் கொண்டே இருந்தனர்.

**மலாரி மறைந்தார்**

மழையாகப் பனி பொழியும் அந்த இடத்தில், மலாரியும் இர்வினும் போய்க் கொண்டிருப்பதை அதற்கு மேலும் இவர்களால் காண முடியவில்லை. அவர்களிருவரும் கீழிருப்பவர் கண்களுக்குப் புலனாகவே இல்லை; அவர்கள் திரும்பி வந்து இவர்களை அடையவுமில்லை! இமயத்தையே அண்மி விட்டனரோ, கொடுமுடியில் கால் வைத்தனரோ, பனிப்பாறைகளுக்கிடையே அகப்பட்டுக் கொண்டார்களோ, உறை பனியில் உயிரிழந்தார்களோ? எவருமே அறியார். உயிரையும் போற்றாது, உடலையும் பேணாது, என்ன நேரும் என்பதறிந்தும் புலிவாயில் பயமின்றி நுழைவது போன்றும், அகன்ற ஆழியில் வீழ்வதைப் போன்றும், மலாரி, இர்வின் மேற்கொண்டிருந்த துணிவு எத்தகைமைத்து? இமயங் காண விரைந்த இருவரையும் இமைக்கும் நேரத்தில் இறைவன் எங்கு ஆழ்த்தினரோ, எங்கு கொண்டு சென்றனரோ! அவர்களுக்கு நேர்ந்த முடிவு நம்மால் அறிய ஒண்ணா மறையாகவே நின்று விட்டது.

எஞ்சி நின்ற குழுவினர், தம்மிடத்திருந்த சிறந்த வீரரைப் பறி கொடுத்து விட்டோமே,

என்று வருத்தத்தில் ஆழ்ந்தனர். பின்னொருக் கால் வந்து பார்த்துக்கொள்வோம் என்றும் நினைத்தனர். மேற்சென்றால் தாமும் மலாரியைப் போல் உயிரிழக்க நேருமோ என அவர்கள் பயந்து தங்கி விட்டனர் அன்று. பின்னும் வலிமிக்கப் பெற்று, பிராண வாயுப் பீப்பாய்களும் நிரம்பப் பெற்று மறுமுறை வந்தால் தவறாது கொடுமுடியைக் கண்டு மீளலாம் என்பதே அவர்கள் பின்னிட்டதின் நோக்கமாகும். டார்ஜீலிங்கில் தங்கியிருந்து பின்னொரு சமயம் முயற்சியை மேற் கொள்ளலாம் என நினைத்தனர். ஆனால் திபேத்திய அரசினர் மறுபடியும் இவர்கள் மலைமேல் ஏறுவதற்கு உத்திரவு அளிக்கவில்லை. இவர்களது பாதம் பட்டு மலையரசி சீற்றங்கொண் டுள்ளாள் என நினைத்தனர் போலும்!

திரும்புகை

கொடுமுடி காண விழைந்தும், போதிய வசதி களும், சாதனங்களும் நிறைந்திருந்த போதிலும் உத்திரவு கிடைக்காததால் இக்குழுவினர் தம் தேயம் திரும்பினர். ஆனால் முயற்சியை நிறுத்த வில்லை. கடைசியாக 1932-ம் ஆண்டு திபேத்திய அரசினர் இவர்கள் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்தனர். உத்திரவு கிட்டியதும் *ஹ்யூ ரட்லெட்ஜ் என் பாரைத் தலைமையாகக் கொண்டு நார்ட்டன், †பிரான்க் ஸ்மைத் மற்றும் பல பயிற்சி பெற்ற வீரர்கள் புறப்பட்டனர்.

1932

எவ்விதத்தும் கொடு முடியை அடைவது என்றே அவர்கள் திட்டமிட்டனர். பெரும் சுமை களைத் தூக்கிச் செல்ல இயல வில்லை என 1924-ம்

* Hugh Rutledge † Frank Smythe

ஆண்டு சென்று கண்ட உண்மையை யுன்னி இம்முறை எடுத்துச் செல்ல வேண்டிய பொருள்கள் பற்றி மிகுதியும் கவனம் செலுத்தப்பட்டது. பிராண வாயு நிரப்பும் பீப்பாய்களை அமைப்பதில் முன்னேற்றம் கண்டு, சிறிது கனமேயுள்ள பீப்பாய்களில் நிறைந்த அளவு பிராணவாயு சேகரிக்கும்படி அமைக்கப்பட்டது. மற்றும் தக்க சாதனங்களுடனும், உறுதிவாய்ந்த கவசங்களுடனும், புறப்பட்டுச் சென்றனர்.

தக்க சாதனங்கள்

இமய மலைச் சாரலையடைந்து, பலமுள்ள ஆட்கள் பலரைச் சுமைதூக்க அமர்த்தி, 1933-ம் ஆண்டு மார்ச் மாதத் தொடக்கத்தில் டார்ஜீலிங் விட்டு மலைப் பிரதேசத்தை யடைந்தனர். ஐந்து இடங்களில் கூடாரம் அமைத்துத் தங்கித் தங்கிச் சென்றார்கள். பற்பல பேராபத்துக்களுக்கும் ஆளாகாது தப்பி, 25,700 அடி உயரம் வரையில் ஏறி வந்துவிட்டனர். இதற்குமேல் செல்லவேண்டுமானல் சிறிது உயரத்தில் ஆறுவது உறைவிடம் ஒன்றை அமைக்க வேண்டியதாயிற்று. இதை அமைப்பதில் தான் மிகுந்த தொந்திரவுக் குள்ளாயினர். ஏற்ற இடம் கிடைப்பது அரிதாயிருந்தது. காலநிலை ஏற்றதாக இருந்தாலும்கூட எதிர்பாரா வகையில் சண்டமாருதம் தோன்றியது. பனி மாரி பொழிய ஆரம்பித்தது. ஆங்குத் தங்கி யிருப்பதுவும் அபாயம் மிக்கதாக இருந்தது. உறைந்த பனிக் குன்றுகள் சரியத் தொடங்கின. இவர்கள் அது சமயம் 25,700 அடிக்குமேல் செல்ல இயலாததாக இருந்தது. அன்று அவ்விடமே தங்கியிருந்து மறு தினம் மேற்செல்ல எண்ணங்கொண்டு இரவுப் பொழுதை ஒருவாறு போக்கினர்.

சண்டமாருதம்

மறு தினம் தாம் தங்கியிருந்த உறைவிடத்தி
னின்றும் புறப்பட்டு மேற்சென்றனர். கடும் பனி
கொடுமையாக இருந்தது. கண் பார்வைக்கு அணிந்
திருந்த கவசக் கண்ணாடியின் மேலும்
உறைபனி வீசத் தொடங்கியது. பனித்
திவலை அதன்மீதும் விழுந்து கண்
பார்வையை மறைந்தது. கவசம் அணிந்திருந்தும்,
உடல் விறைக்கலுற்றது. இந் நிலையில் மேற்
செல்வது கடினமாகிவிட்டது. கண்ணாடி வழியே
பார்க்க முடியாது போனமையால் அவர்கள்
மேலும் போகாது தட்டித் தடுமாறித் தாம் ஏறிய
வழியே திரும்ப வந்து கூடாரம் சேர்ந்தனர். மறு
நாள் மிக ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் புறப்
பட்டனர். பனிக் கட்டிகளை உடைத்துப் பாதை
செய்துகொள்ள வேண்டியது அவசியமாயிற்று.
ஒவ்வொருவரும் சிறிது சிறிது நேரம் மாறிமாறிக்
கொஞ்சம் கொஞ்சமாக வெட்டிக்கொண்டே சென்
றனர். இவ்வாறு ஏறக்குறைய ஓர் ஆயிரம் அடி
உயரம் மிக்க சிரமத்துடன் ஏறினர்.

(கடும் பனி)

முயற்சி மெய் வருத்தக் கூலிதரும் அல்லவா?
இக் குழுவினர் அடைந்த அல்லல்களுக்கு இனித்
தான் பயன்பெறப் போகிறார்கள். கொடுமுடி
இருக்கும் திசையையும் கீழே நிலவும்
பனிப் பாறைகளையும் தவிர வேறு
எந்தத் திசையுமே நோக்கியறியார்கள்.
ஒரே நோக்குடன் முன்னேறிச்சென்ற
அவர்கள், சூரியன் ஒளி வீசும்போது தங்கள் கண்
களையே நம்ப முடியவில்லை. கானல் நீரன்னவெறும்
பிரமையோ என்று தங்கள் கண்களிடம் தாங்களே
ஐயம் கொண்டனர். பல்லாண்டுகளாகக் காண
விழைந்த கொடுமுடியைக் கண்ணாரக் கண்டனர்.
மாமலையரசியின் மகுடத்தைக் கண்டு மன மகிழ்ந்

(கோடுமுடி காணல்)

தனர். உருகிய வெள்ளிக் குழம்புபோல் சுடர் விட்டு ஒளி மிளிரும் கொடுமுடியைக் கண்டனர். கண்ணாரக் கண்டும் என்? அவர்கள் விழைந்தது அக் குடுமியில் ஏறி நிற்கவன்றோ? அதனைக் கண்டு எவரும் பெரும்பேற்றைப் பெற்றோம் என்று அகங் குளிர்ந்தனர். இன்னும் முயன்று, எட்டாத முடியையும் எட்டிப் பிடிக்கலாம் என்று இன்பக் கனவு கண்டனர். வெற்பைக் காணும் வெற்றியைப் பெறுவோம் என்று உறுதி கொண்டனர்.

இவ்வின்பக் காட்சியைக் கண்டு அனைவரும் தம்மை மறந்தனர். அவர்கள் மனத்தால் நினைக்கும் முன்பே அவர்கள் கால்கள் தானாகவே மேல் நோக்கி எழுந்தன. திளைத்திருந்த மானிடனும் அந்த மன மகிழ்ச்சியின் ஊக்கிய இயற்கையும் வேகத்தாலே எவரெஸ்ட் சிகரத்தை அடைய வேண்டும் என்னும் உணர்ச்சி மேற்கொண்டவராயினர். மானிடன் மாண்புறு செயலைப் புரிவானாயினும், இயற்கையும் அவனுடன் ஒத்துழைக்க வேண்டுமன்றோ? மக்கள் எண்ணத்தையும் இயற்கை வெல்லும்போலும்! மலைச் சிகரம் முன்பு அளித்த இன்பக் காட்சி மாறி, இன்னல் காட்சி அளித்தது. மறுபடியும் பனி வீசத் தொடங்கியது. காற்று வீசத் துவக்கியது. குளிர் மேலிட்டது. இதயமும் இரத்தமும் உறைந்து விடும்போல் காணப்பட்டன. உதடுகள் வெடிக்க ஆரம்பித்தன. ஓர் அடி கூட இனி எடுத்து வைக்க இயலாத நிலை ஏற்பட்டு விட்டது. ஆதலின் தமது உறையுளிற்குத் திரும்பினர்.

துன்பம் வந்தால் தொடர்ந்து வருமன்றோ? பருவமோ இவர்களைப் பெரிதும் பய முறுத்தியது. உறையுள் பனிவரையுள் மூழ்கி விடுவது போலப்

பனி மூண்டது. இரவுப் பொழுதைப் போக்குவதும் மிகத் துன்பமாக முடிந்தது. இனியும் இக்கூடாரம் காற்றையும் பனியையும் தாங்கி நிற்கும் என்பதும் சந்தேகமாகி விட்டது.

**தத்தளிப்பு**

சூறாவளியால் அலைகடலில் நிலை கலங்கும் கலத்தைப் போன்று தத்தளித்தது அக்கூடாரம். ஒருவாறு எப்படியோ இரவுப் பொழுது கழிந்தது.

மறுநாட் காலையிலும் குளிர் மிகுதியாயும் காற்றுப் பலமாயும் அடித்துக் கொண்டு தானிருந்தது. பானங்கள் வைத்திருந்த *'தெர்மாஸ் பாண்டங்கள்' சூட்டை நிலை நிறுத்தவில்லை. அவ்வளவு குளிர். தீ மூட்டிப் பனியை உருக்கி நீர்பருக வேண்டியதாயிற்று.

**ஆறாம் உறையுள்**

இந்நிலையிலும் அவர்கள் தமது முயற்சியைக் கைவிட்டனரில்லை. இடையிடையே தங்கித் தங்கிச் சிறிது இளைப்பாறியே 400 அடி உயரம் சென்று விட்டனர். இன்னும் 1600 அடி உயரமே உள்ளது எவரெஸ்டு சிகரம். பார்ப்பதற்கு எட்டிப் பிடித்து விடலாம் எனத் தோன்றினும் அதை அடைவதற்கு எத்துணை பிரயாசை எடுத்தாலும் வெற்றி கிட்டுமோ, கிட்டாதோ என்னும் ஐயம் மட்டும் தோன்றாமல் இல்லை. இவ்விடத்தில் ஒரு பாசறை அமைத்துக் கொண்டனர். இதுவே இவர்களது ஆறாவது உறையுள் ஆகும்.

அன்றிரவு அவர்கள் நல்லுறக்கம் கொண்டிலர்; அதிகாலையிலேயே விழித்துக் கொண்டனர்; சிறிது உணவு அருந்தினர். கொடுமுடிக்கு மேல் எம்மாலும் செல்ல இயலாதோ என கதிரவன் ஐயங்

---

*Thermos Flasks

கொண்டான் போலும்-இன்னும் அவன் உதிக்கவே யில்லை. *ஹாரிஸ், †வேஜர் என்னும் இரு வீரரும் எதையும் பொருட்படுத்தாமல் புறப்பட்டு விட்டனர். நெடுநேரம் குளிரால் நடுங்கினர். உடல் போதுமான உஷ்ணத்தைப் பெற்றிருக்க வில்லை. பாதையும் ஒழுங்கற்று இருந்தது. மிகச் சரிந்த பாறைகளே நிறைந்திருந்தன. கால் சிறிது தவறிவிட்டாலும் பல்லாயிரம் அடிகளுக்கும் கீழே விழ ஏதுவாகும். அவ்வாறிருந்தும் கூட தொடர்ந்தே சென்றனர். 28,100 அடி உயரமும் எட்டி விட்டனர். அன்றைக்கு அவர்கள் தொடர்ந்து சென்றிருந்தால் ஒருக்கால் எட்டாதகொடுமுடியைத் தொட்டிருக்கலாம். ஆனால் அவர்கள் ஆங்குச் சென்று திரும்பி வந்து சேருவதற்குப் பகற்பொழுது குறுகியது. ஆனதால் 28,100 அடி சென்று விட்டோம் என்ற ஒரே பெருமையுடன் திரும்பினர்.

உயர்ந்த உயரம்

ஸ்மைத், ஷிப்டன் ஆகிய இருவரும் மறுதினம் புறப்பட ஆயத்தங் கொண்டனர். புறப்படு முன் ஷிப்டன் வயிற்று நோயால் துன்புற்றார். ஸ்மைத் மட்டும் தனித்துச் சென்றார். அவர் சென்ற பாதை முழுதும் பனித்துகள் நிரம்பி யிருந்தன. சில இடங்களில் மணல்போல் படிந்த பனித்துகள்களும், பல இடங்களில் பனிச் சேறும் நிறைந்திருந்தன. இவற்றில் காலை வைத்து, பனிப்படலத்தி லிருந்து காலை வெளியே எடுப்பதற்குப் பல நாழிகை போராட வேண்டியிருந்தது. ஐந்து மணி நேரம் தொடர்ந்து ஏறியும் ஐம்பது அடி உயரம் கூட

முயற்சியின் முடிவு

* Harris † Wager

ஏற முடியவில்லை. பலவாறு முயன்றும் அதற்கு மேல் போக முடியவில்லை. ஆங்கு வீசிய காற்று அவரையே கீழே தள்ளி விடுவதுபோன்று இருந்தது. குளிர் காற்று, சாட்டை கொண்டு அடிப்பதைப் போன்று தாக்கியது. நடந்து செல்லுவதும் அரிதாயிற்று. கோடரியை ஊன்றியும் நிற்க முடியவில்லை. கீழே படுத்து மார்பினால் ஊர்ந்தும் சென்றார். எவ்வாறு முயன்றும் சிகரத்தை அடைய முடியவில்லை. தாம் ஏறிய வரையில திருப்தி கொள்ள வேண்டியதாயிற்று. இதற்கு மேல் நடந்து செல்வது இயலாது என்று ஸ்மைத் கண்டு, ஊர்ந்து வந்து உறையுள் சேர்ந்தார். பின்னர் கீழிறங்கி வந்து ஒவ்வொரு பாசறையிலும் தங்கியிருந்தவர்களுடன் ஒன்று சேர்ந்து, தாம் கண்டவற்றை விளக்கினார். இத்துடன் இக்குழுவினரின் முயற்சி நிறுத்தப்பட்டது.

கிட்டாத நாட்டம்

1936-ம் ஆண்டு ஹ்யூ ரட்லெட்ஜ் தலைமையில் மறுபடியும் முயற்சிக்கப் பட்டது. முன் பெருந்தூரம் சென்று புகழடைந்த ஸ்மைத், ஷிப்டன், ஹாரிஸ், ஆலிவர் ஆகியோர் கலந்து கொண்டனர். ஏப்ரல் மாதக் கடைசியில் புறப்பட்டுக் கடுகி வழி நடந்தனர். முன்போலவே ஆங்காங்குக் கூடாரங்கள் அமைத்துக் கொண்டு சென்றனர். பருவகாலமும் அவர்கட்குத் துணை செய்வதாய்த் தோற்றியது; ஆயினும் அது நிலைக்கவில்லை. வழக்கம் போல் பனி. பருவ நிலை சற்று நிலையாக இருந்தபோது விடாமுயற்சியுடன் முன்னேறினர். கொடுமுடியையடைய இன்னும் ஒரே ஒரு பகுதியைத்தான் கடக்கவேண்டும். ஆதலால் வடக்குப் புறம் சிகரத்தின் தோள்பட்டை போன்ற பாகத்தில் தங்கி, அங்கிருந்து மெல்ல ஏறிக் குடுமியை அடையலாம்

என எண்ணமிட்டனர். ஆனல் உறைபனி கடுமையாகத் தாக்கியதாலும், ஏறிச் செல்லவேண்டிய பகுதி மிருதுவான பனி உறைந்து வழுக்கலாக இருந்தமையாலும் ஏறிச் செல்லுவது இயலாத செயலாம் என முடிவு செய்து 'மனிதனல் முடிந்த வரையில் வரையின் மேல் ஏறியாகி விட்டது. இனியும் மேற்கொண்டு ஏறுவதை இயற்கை தடை செய்கிறது' என்ற முடிவுடன் திரும்பி விட்டனர்.

இவ்வீரக் குழுவினர் செய்த தீர்மானமும் உறுதி பெறுவதாயிற்று. அதன் முன்னும் பின்னும் பல தேயத்தவர்களும் பிரயாசித்தும், அதற்கு மேல், முடியை எட்ட முடியவில்லை. கால் நடையாகச் சென்று அடைதல் முடியாதென்று முடிவாகக் கண்டனர். நடந்துதான் செல்ல முடியா விட்டாலும், ஆகாய விமானம் வழியே சென்றாவது முடியைத் தொடலாம் என்ற முயற்சிகளும் நடைபெற்றன. ஆகாய விமானமும் அவ்வளவு உயரத்தில் செல்லுவது கடினமாக இருந்தது. ஆங்கு வீசும் காற்றினல் விமானமும் சிதறியோடத் தக்கதாக இருந்தது. விமானம் ஓடுவதற்கு உபயோகிக்கும் பெட்ரோல் எண்ணெயும் உறைந்து விடுவதாயிற்று. வானவெளியைக் கிழித்துக் காற்றினும் கடிதாகச் செலுத்தவேண்டியது அவசியமாயிற்று. 1943-ம் ஆண்டு இம் முயற்சியில் ஒருவாறு வெற்றி பெற்றனர் என்னலாம்.

விமான வெற்றி

பல்லாண்டுகட்கு முன்னர், அந்நிய நாட்டினர், இந்தியாவில் இவ்வாறும் ஒரு மலையுள்ளது என்று அறியு முன்னரே தமிழ்நாட்டு மூவேந்தர்களாலும் இமயம் காணப்பட்டது. அவர்கள் ஆங்குச் சென்று, தாம் அவ்விடம் சென்றடைந்ததற்கு அறிகுறியாக

இலச்சினைகளைப் பொறித்து வந்ததாகத் தண்டமிழ் நூல்கள் உணர்த்துகின்றன. அவர்கள் உருவப்படம் எடுத்துக் காட்டவில்லை; சலனப்படம் போட்டுக் காட்டவில்லை. செப்பேடுகள், கல்வெட்டுக்கள், கற்சிலைகள் வாயிலாக, என்றென்றும் அழியா வண்ணம் பொறித்து வைத்திருக்கின்றனர். பழந் தமிழ் நூல்களும் அவற்றை உணர்த்துகின்றன.

தமிழ்நாடும் இமயமும்

இமயஞ் சென்றதால் காரணப்பெயர் பூண்ட காவலனும் நம் தமிழ்நாட்டில் இருந்தான். அவனே இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் என்னும் சேர வேந்தன். ஆங்கு விற்கொடியைப் பொறித்து வந்தான். அவனது புகழைப் பொய்யறியாப் பரணர் ‘பேர் இசைத், தொன்று முதிர் வடவரை வணங்குவில் பொறித்து’ எனப் புகழ்ந்துள்ளார். தமிழரசாற்றிய வெற்றி வீரன் சோழன் கரிகாலன் என்னும் திருமாவளவன், இமயஞ் சென்று தனது ஒப்பற்ற புலிக் கொடியை நாட்டி வந்தான். ‘வடவரைமேல் வாள் வேங்கை ஏற்றினன்’ எனச் சிலப்பதிகாரமும், ‘இமயமால் வரை.... முதுகில், பாய் புலிப் பொறி பொறித்து’ என்று கலிங்கத்துப் பரணியும் அவனது வீரச் செயலைப் பாராட்டுகின்றன. பாண்டியனும் தனது மீன் கொடியை ஆங்கு நாட்டாதிருக்கவில்லை. ‘பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதி’ எனப் பெரியாழ்வார் பாண்டியரைச் சிறப்பிக்கின்றனர். இளங்கோ அடிகள்,

இமயமும் மூவேந்தரும்

> “தென் தமிழ் நாடாளும் வேந்தர்
> செருவேட்டுப் புகன்றெழுந்து,
> மின் தவழும் இமய நெற்றியில்
> விளங்கு வில் புலி கயல் பொறித்த”

என்று மூவரையும் ஒருங்கு வைத்துப் போற்று கின்றார்.

இணையற்ற இமயத்தின் கொடுமுடி எவரது காலடியையும் தாங்கியதில்லை. இத்தகைய இணை யற்ற இமயம், இந்தியாவின் இயற்கைச் செல்வமாக வும், பலத்த பாதுகாவலனாகவும், எவரையும் ஏற வொட்டா உயரமுள்ள மால்வரையாகவும் அமைந் துள்ளது. அது பற்றி இந்திய மக்களாகிய நாம் பெருமிதம் கொள்வோமாக!

---